ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:. ஸ்ரீமத்வரவரமுநயே நம:.







மயிலைத் திருமாமணி மண்டபத்தில்

ஸ்ரீமான் D. T. தாதாசாரியாருக்கும்

மற்றும் சில வித்வான்களுக்கும்

நடந்த ஸம்பாஷணையின் விளக்கம்



# D. T. தாதார்யசேகரம்



(1. 2. 3 ஆன்னிகங்கள்)

ஸ்ரீமான் சிரோமணி வித்வான். P. R. நரஸிம்ஹாசாரியர்

தொகுத்தது.


கோவிந்தராஜ லக்ஷ்மி யச்சுக்கூடத்தில்

அச்சிடப்பட்டது.

கிடைக்குமிடம். என். ரங்கராஜய்யங்கார்

8. பிராம்மண வீதி. ஸைதாபேட்டை, சென்னை-15.

1970

விலை ரூ 1

ஸ்ரீரஸ்து

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:. அஸ்மத்குருப்யோநம:

# D. T. தாதார்ய சேகரம்

வெண்பா

ஆழ்வார்கள் தங்க ளருளிச் செயல்களினல்
வாழ்வாக வாய்ந்த வரும்பொருளை—ஏழ்பாரு
முய்ந்திட நம் மாரியர்க ளோங்குமரு ளால்விக்க
உய்ந்தனமே நாமு முயர்ந்து.

அடியேன் கோடைகால விடுமுறைக்கு மயிலாப்பூரில் வசித்து வந்தேன்; அவ்விடத்தில் சென்ற வருடத்தில் புதிதாக நிருமாணிக்கப்பட்ட திருமாமணி மண்டபத்தில் சில பெரியார் அடிக்கடி கூடிக் காலக்ஷேபங்கள் சாதிக்கிருர்க ளென்று தெரிய வந்ததனுல் ஒழிவுள்ளபோது அங்கே சென்று கொண்டிருந்தேன் ஸ்ரீமான். D. T. தாதாசாரியார் சுவாமிகள் அவ்விடத்திலேயே ஸ்திரவாஸமாக இருந்து வருவதால் கால க்ஷேபமில்லாத சமயங்களிலும் அவரோடு பேசுவதற்காக அங்கே போய்க் கொண்டிருந்தேன். என்னுேடு கூட வேறு சில பேர்களும் வந்து கொண்டிருந்தார்கள். தாதாசாரியர் சுவாமிகளுக்கு எப்போதும் தெங்கலை வடகலை விஷயமாக விஷமமாகப் பேசுவதிலேயே அதிகமான ஊக்கமென்பது தெரிய வந்தது. "நான் அந்த புத்தகத்தில் அப்படியெழுதியிருக்கிறேன், இந்த புத்தகத்தில் இப்படி வரைந்திருக்கின்றேன்" என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தார்; தான் வடமொழியில் ஸம்ப்ரதாயப்ரதீப மென்று ஒருநூல் எழுதி தேவநாகரிலிபி யில் அச்சிட்டிருப்பதாக ஒரு நாள் சில பண்டிதர்களிடத்தில் பிரஸ்தாபம் செய்தார் அதில் காஞ்சீபுரம் சுவாமிகளின் நூல்களுக்குப் பூர்த்தியான கண்டனங்கள் இருப்ப தாகவும் சொல்லிக் கொண்டிருந்தார். அந்த புத்தகத்தைச் சிலர்க்கு விற்பனை செய்து கொண்டு மிருந்தார்.

என்னையும் ஒரு புத்தகம் விலைக்கு வாங்கிக் கொள்ள வற்புறுத்தி வந்தார் எனக்கு வடமொழி பரிசயமிருந்தாலும் தேவநாகரிலிபி தெரியாததலால் அதி லுள்ள முக்கியமான விஷயங்களை யெடுத்துச் சொல்லும்படி அவரையே கேட்டுக் கொண்டேன். அந்த புத்தகத்தை விலை கொடுத்து வாங்கிக் கொண்டால்தான் சொல்லுவர் போலிருந்தது. உடனே அதன் விலையைப் பாதகாணிக்கையாக ஸமர்ப்பித்து விட்டேன். பிறகு உற்சாகமாகச் சொல்லத் தொடங்கினர். (பாரி ஜாத புஷ்பமென்கிற ப்ரபந்தஸாரவைபவம்) என்கிற (10 வருடங்களுக்கு முன்பு அச்சிட்ட) ஒரு புத்தகத்தையும், திருப்பாவை வாஸ்தவார்த்தம் என்கிற நூதன புத்தக மொன்றையும் எடுத்து வந்து கொடுத்து இரண்டரை ரூபாய் தாரு மென்றுர். தந்து அவற்றையும் பெற்றுக் கொண்டேன். இந்த மூன்று புத்தகங் களைப் பற்றியும் சில நாள் வரையில் தினப்படியாக சம்பாஷணைகள் நடத்த வேணுமென்று ஏற்பாடுமாயிற்று. ஸம்ப்ரதாய ப்ரதீபமென்கிற வடமொழிப் புத்தகத்தை யெடுத்துக் கொண்டார். அதில் பக்கம் 82 ல் 55 என்று லக்கமிட்ட பாராவை வாசித்து தானே அர்த்தம் சொன்னுர்; காஞ்சீபுரம் சுவாமிகள் வட

கலையாருக்கு தேசிகரோடு உறவு இருந்ததில்லை யென்று சபதம் செய்திருப்பதாக வும், தேசிகக்ரந்தங்களில் சொல்லப்பட்டுள்ள அர்த்தங்களுக்கு விபரீதமாகவே வடகலையார்கள் பேசுகிறார்களென்று எழுதியிருப்பதாகவும், இப்படி வெகு கால மாகவே எழுதிக்கொண்டிருக்கிற அவரை (காஞ்சீபுரம் சுவாமிகளை) தானும் தம ரும் நூறு தடவை கண்டித்து எழுதி வெளியிட்டிருந்தும் அவர் வெட்கமில்லா மல் அதையே மேன்மேலும் அச்சடித்துப் பிரசுரம் செய்துவர, ஏனிப்படி செய் கிறீரென்று நாங்கள் கேட்க, நீங்களும் நீங்கள் சொன்னதையே மேன் மேலும் அச்சிட்டு வெளியிடுங்களே, தடுப்பாரார்? என்று காஞ்சீபுரம் சுவாமி சொன்ன தாகவும், கடைசியாக "தேசிக ஸ்ரீஸூக்திகளிலிருந்து தென்னாசார்ய ஸம்பிரதா யார்த்தங்களை நிலைநாட்டப் பார்ப்பதானது ஸ்ரீபாஷ்யத்திலிருந்து அத்வைத ஸித்தாந்தத்தை ஸ்தாபிக்க முயல்வதோடு ஒக்குமென்று வித்வான்கள் அறிந்து கொள்ள வேண்டியது" என்று தான் எழுதியிருப்பதாகவும் ஸம்ஸ்கிருதபங்க்தி களை வாசித்துச் சொன்னார்.

நான் காஞ்சீபுரம் ஸ்வாமிகளின் நூல்களை அனேகமாகப்பார்த்திருக்கிறேன் இன்னும் அங்கிருந்தவர்களில் சில பேர்கள் என்னைவிட அதிகமாகப்பார்த்திருப் பதாகவும் சொன்னார்கள். D. T. சுவாமிகள் பிரஸ்தாபித்த விஷயத்தைப்பற்றிப் பூர்த்தியாகத் தெரிந்து கொள்ள வேணுமென்கிற ஆசை எனக்கு மட்டுமல்லா மல் கூட இருந்தவர்களுக்கு முண்டாயிற்று. அதனால் சிலநாள்வரை தினப்படி யாகவே இது பற்றின ஸம்பாஷணை நடந்து கொண்டிருந்தது அது உலகுக்குத் தெரிந்திருப்பது நலமென்று தோன்றி இது வெளியிடலாகிறது.

## நடந்த ஸம்பாஷணை அப்படியே எழுதப்படுகிறது

(நாங்கள் கேட்டது.) இப்போது தாங்கள் வாசித்துக் காட்டினவிடத்தில் காஞ்சீபுரம் ஸ்வாமி தவறுதலாக எழுதியிருந்த விஷயத்தையும், அதற்குத் தாங்கள் எழுதியுள்ள கண்டனத்தையும் விளக்கிச் சொல்லலாமோ?

(தாதாசர்) ஆகா, தாராளமாகச் சொல்லுகிறேன்; (த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே) இத்யாதிப்ரமாணப்படி சேதனன் பகவானைப்பற்றுவது உண்டே யொழிய, பகவான் சேதனனைப்பற்றுவதென்பது எங்காவது உண்டா? சேதனன் பகவானைப்பற்றுவதற்கு ஸ்வகத ஸ்வீகாரமென்று பெயர், இது ஒன்றுதானுள்ளது; எம்பெருமான் சேதனனைப் பற்றுவதாகவும், அதற்கு பரகதஸ்வீகார மென்று பெயராகவும் சாஸ்த்ரவிருத்தமாக இப்படி யொரு கற்பனை செய்து, அதற்கு பாஷ் யகாருடைய ஸ்ரீஸூக்தியும் தேசிகனுடைய ஸ்ரீஸூக்தியும் ஆதாரமாயிருப்பதாக வும் எழுதி உலகத்தாரை வஞ்சித்திருக்கிறார். இது பெரு மோசமான விஷயம் எம்பெருமான் சேதனனைப் பற்றுவதென்பது எங்கேயாவது உண்டா? ஸம்பா விதமா? அஸம்பாவிதமானவிதற்கு பாஷ்யகார ஸ்ரீஸூக்தி ப்ரமாணமிருப்பதாகக் காட்டுவது உலக வஞ்சனையல்லவா?

(நாங்கள்) காஞ்சீ ஸ்வாமி காட்டின ப்ரமாணம் எது? அதன் மேல் தாங்கள் எழுதியிருப்பது என்ன? அதை விளக்கமாகச் சொல்ல வேணும்

(தாதாசார்) என்னுடைய ஸம்ப்ரதாயப்ரதீபத்தில் (பக்கம் 85ல்) எழுதியிருப்பதைச் சொல்லுகிறேன். கீதையில் * அநந்யாச் சிந்தயந்தோ மா மென்கிறசுலோகத்தில் ஸ்வகதஸ்வீகாரந்தான் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறது. அவ்விடத்து ராமாநுஜ பாஷ்யத்திலும் "ய: ஸ்மரதி தஸ்ய நித்யயோகம் காங்க்ஷமாணஸ்ய" என்றிருன க்ரந்தத்தாலே அந்த ஸ்வகதஸ்வீகாரம் நன்ருக விளக்கப்பட்டு விட்டது. இப்படி ஸ்வகதஸ்வீகாரம் பண்ணின அதிகாரிக்கு பகவான் எவ்விதமாக எளியனுகிருனென்பதை உபபாதிக்கவந்த பாஷ்யகாரர் "தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே; மத்ப்ராப்த்யநுகுணோபாஸனவிபாகம் தத்விரோதி நிரஸநம் அத்யர்த்த மத்ப்ரியத்வாதிகஞ்ச அஹமேவ ததாமி இத்யர்த்த:." என்றருளிச் செய்தார். இங்கு அவதாரிகையிலும் சுலோகத்திலும் அதன் பாஷ்யத்திலும் முமுக்ஷுவுக்கு ஸ்வவ்யாபாரம் வேண்டுமென்று திடமாகச் சொல்லியிருப்பதை உதறித் தள்ளிவிட்டு, சுலோகத்தின் உட்கருத்தை விளக்குவதற்காக முடிவில் பாஷ்யகாரர் எழுதியுள்ள (அஹமேவ தம் வ்ருணே) இத்தியாதி வாக்யத்தைக் கொண்டு தப்புப் பொருளுக்கு ஆதாரமாக உதாஹரிக்கிற இவருடைய வஞ்சனையை எல்லாரும் எளிதாக அறியலாம்— என்றெழுதியிருக்கிறேன்

(நாங்கள்) வஞ்சனையை எல்லாருமறியலாமென்றெழுதி விட்டீர்; இங்கு எவ்விதமான வஞ்சனை காஞ்சீபுரம் ஸ்வாமியிடத்திலுள்ளதென்பதை உபபாதிக்க வேண்டாமா? பாஷ்யகாரர் எழுதாததை எழுதினதாக அவர் காட்டியிருக்கிருரா? அல்லது பங்க்திக்கு அர்த்தமல்லாததை அர்த்தமாக ஏறிட்டுக் காட்டியிருக்கிருரா? அந்த ஸ்வாமி எந்த பங்க்திகளை யெடுத்துக் காட்டியிருக்கிருரோ அவற்றை அப்படியே தாங்களும் இசைந்து எடுத்துக் காட்டியுள்ளீர்கள்; அவ்வளவோடும் நிற்காமல் "சுலோகத்தின் உட்கருத்தைக் காட்டுகிற பங்க்திகளிவை" என்றும் எழுதி வைத்திருக்கிறீர்கள். மேலெழுந்த பொருளைக் காட்டிலும் உட்கருத்தே மிகச் சிறந்ததென்பதில் தங்களுக்கு விவாதமுண்டோ? "அஹமேவ தம் வ்ருணே" என்கிற பாஷ்ய ஸூக்திக்கு (சேதந ஏவ மாம் வ்ருணீதே) என்று தான் அர்த்தம் என்கிறீர்களா? உண்மையில் நீங்கள் யாரை வஞ்சகராகச் சொல்லவேணுமென்றுல் மூலத்திலுள்ள பதங்களினுல் கிடைக்காததை தாத்பர்யமாக எழுதி வைத்திருக்கின்ற பாஷ்யகாரரையும் அவரை ஆரத்தழுவுகின்ற தேசிகரையும் வஞ்சகராகச் சொல்ல வேணும்; (தஸ்யாஹம் ஸுலப:) என்கிற மூலத்திற்கு சங்கராசாரியர் என்ன அர்த்தம் எழுதியிருக்கிருர்? கண்டிருப்பீர்களே; ஸாதிக்கலாமோ?

(தாதாசார்) ஸுலப:— ஸுகேந லப்ய:. என்றிவ்வளவே சங்கர பாஷ்யம்.

(நாங்கள்) நமது பாஷ்யகாரரும் அவ்வளவு தானே யெழுதியிருக்க வேண்டும். (தத்வியோகம் அஸஹமாந:) என்றும் (அஹமேவ தம் வ்ருணே) என்றும் உதக்ஷரமாக பாஷ்யகாரரை யார் எழுதச் சொன்னது? மூலத்தில் எந்தபதம் அவரை இப்படியெழுதத் தூண்டிற்று? பாஷ்யகாரரை வஞ்சகரென்ன மாட்டாமல் காஞ்சீஸ்வாமியை வஞ்சக ரென்கிறீரே! இது நியாயமா?

(தாதாசார்) இங்கு பாஷ்யகாரர் அதிகப்படியாக எழுதி விட்டாரென்றுதான்பெரியார்கள் ஸாதிப்பது வழக்கம். நான் குருமுகமாகக் கேட்டதில்லை. சொல்லக்கேள்வி

(நாங்கள்) அப்படியானல் நீங்கள் பாஷ்யகாரரைக்ஷேபிக்க வேணுமேயொழிய காஞ்சீஸ்வாமியை எதற்காக க்ஷேபிப்பது? நிக்ரஹஸ்தானத்திற்கு நிலமாம்படி பேசுவது நீதியன்றே; இங்கு முக்கியமாக ஒன்று கேளீர். (அஹமேவ தம் வ்ருணே) என்கிற ஸ்ரீஸூக்தியினல் பாஷ்யகாரர் தாம் காட்டின பொருளுக்கு * யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:* என்கிற ச்ருதியைக் காட்டுவதற்கு என்ன ப்ரஸக்தி? இங்கு தேசிகருடைய தாத்பர்ய சந்த்ரிகை எப்படி அமைந்திருக்கிற தென்பதை கவனித்திரோ?

(தாதாசர்) கவனிக்காமலென்ன? "உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வ சங்கா வ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ- யமேவேதி." என்று தாத்பர்ய சந்த்ரிகையிருப்பதை நன்குஅறிவேன். (ப்ரஸக்தஸ்யைவஹி ப்ரதிஷேத:) (ந ஹி அப்ரஸக்தம் ப்ரதிஷித்யதே) என்பது சாஸ்த்ரஜ்ஞ கோஷ்டிகளில் ப்ரஸித்தம். "இது அதிவாத மாத்ரம்" என்று பல பெரியார்கள் திருவுள்ளம் பற்றியிருந்தார்கள் என்பது இதனல் ஸ்பஷ்டமாய் விடவில்லையா? அது இருக்கட்டும்! மேலே போவோம். பரகத ஸ்வீகாரமென்பது ஸர்வாத்மநா அஸம்பாவிதமல்லவா? ச்ருதி சொல்லிவிட்டாலென்ன? பாஷ்ய காரர் சொல்லிவிட்டாலென்ன? பகவானே ப்ரத்யக்ஷனல்லன், அவன் இவனை எப்படி வரிக்கவோ ஸ்வீகரிக்கவோ முடியும்? "அஹம் ஸம்ஸாரிணம் வ்ருணே" என்று பகவான் எங்கேயாவது சொன்ணனு?

(நாங்கள்) பரகதஸ்வீகார மென்பது காஞ்சீ ஸ்வாமி தாமாகக் கல்பித்த தொன்று என்றும், இந்தபதமே புதிசா: அவர் ஸ்ருஷ்டித்த தென்றும் ஸ்வகதஸ்வீகாரந்தான் மோக்ஷப்ரதமாகுமென்பது தான் தேசிகனுதரித்த மதமென்றும், அந்த தேசிகனுடைய திருவாக்கிலிருந்து பரகதஸ்வீகார ஸாதுத்வத்தைக் காட்டுவதானது ஸ்ரீபாஷ்யத்திலிருந்து அத்வைத மத ஸித்தியைக் காட்டுவது போலாகுமென்றும் குமுறியிருக்கிறீர். தேசிக திவ்ய ஸூக்திகளில் பரிசய லேசமாவது இருந்தால் இப்படியெல்லாம் எழுதவோபேசவோ முன்வந்திருப்பீரா?

(தாதாசார்) என் வாதத்திற்கு ப்ரதிகூலமான தேசிகஸ்ரீஸூக்தி யிருந்தால் நீங்கள் காட்டலாமே. விளங்கக்காட்டினல் அதைப்பிடித்துக் கொள்ளுகிறேன்.

(நாங்கள்) ஸ்வகத ஸ்வீகாரமான வார்த்தைகள் (அதாவது)ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே, புகலொன்றில்லா வடியேன் உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே—இத்யாதிகள் நம்முடைய வாக்கில் வராமலா இருக்கிறது? பரச்சதமும் பரஸ் ஸஹஸ்ரமும் வருகிறது இவை எப்படி வருகிற தென்பதையன்றோ தேசிகன் கண்டறிந்து ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயஸாரத்தில் „நிதாநம் தத்ராபி ஸ்வயம் அகில நிர்மாண நிபுண:" என்றுர். அதே க்ரந்தத்தில் ப்ரதாந ப்ரதி தந்த்ராதிகார மென்று ஒன்று வைத்து, சரீராத்ம பாவமாகிற அதனை நன்கறிந்து உபபாதிக்க வல்லவனை ஒரு பண்டிதன் முன்னே ஸகல பஹிர்மத கோலாஹலங்களும் அரை நொடியில் தொலையுமென்று சபதம் செய்கிறுர் தேசிகன். அதே ரீதியில் (நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண: ) என்கிற இந்த ஒரு பாதத்தின் முன்னே—இந்தஒரு தேசிக ஸூக்தியின் முன்னே ஸாநுபந்தியான உம்முடைய ஸகலவாதங்களும் தொலையுமென்று—தொலைந் தொழிந்ததாகவே உண்மை

யான தேசிகபக்தர்கள் சபதம் செய்ய முடியுமே. ஹேது:, காரணம் இத்யாதி பதங்களைவிட்டு (நிதாநம்)என்கிற பதத்தை எதற்காகவையா! தேசிகனிட்டார்? இங்கே (அகிலநிர்மாண நிபுண:) என்கிற விசேஷணந்தான் ஏதுக்கையா! என்று கேட்டால் வாயைத் திறக்க முடியுமா உம்மால்? இயுத்த புளி தானே.

மற்றென்றும் கேளும். ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய ஸாரத்தில் சரம ச்லோகாதி காரத்தில் (மா மேகம், சரணம் வ்ரஜ) என்ற விடத்து ஏக சப்தார்த்த விவரணம் செய் தருளுகிற தேசிகன் ஸாதித்திருப்பவைகளை ஸேவித்தால் கல்லும் கரையுமே: அவ்விடத்தில் அழகிய தேசிக பங்க்திகளைக் கேளும்;—

" *கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்* என்கிற படியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ராமாணிகமே யாகிலும் இது பராதீனமுமாய் அல்பவிஷயமுமாய் ப்ரதிஹதி யோக்யமுமாயிருக்கும் ஆகையால் இவன்தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும் * வரத! தவ கலு ப்ரஸாதாத் ருதே சரணமிதி வசோபி மே நோதியாத் * என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு அவன் காட்டின வுபாயத்தை அவன் துணைசெய்ய அநுஷ்டித்து அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம் போலே அண்ணுந்திருக்கிற இவனை ஸ்வாதீந ஸர்வவிஷய அப்ரதிஹத கர்த்ருத்வ முடையவனோடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாப்யமாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று—என்று ஏக சப்தத்தாலே சொல்லிற்றாயிற்று." (மறுபடியும் பத்துவரி கடந்து மேலும் வாசியுமையா !.) —" * என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளே யென்றும் * இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழிருத்து மம்மானே யென்றுஞ் சொல்லுகிறபடியே உபாய பூதனை அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜ மாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக வெண்ணுகை உசித மன்றென்று ஏக சப்தத்துக்கு தாத்பர்யம் என்றார் தேசிகர். கிம் பவாந் நேத்ர ஹீந:!

(தாதாசார்) இந்த தமிழ்ப் பாட்டுக்களெல்லாம் சாஸ்த்ரார்த்த நிர்ணயகமாகாது (அத்யந்தபக்தியுக்தாநாம் ந சாஸ்த்ரம் நைவ ச க்ரம:) என்றது உங்களுக்குத் தெரியாதா? பக்திப்ரகர்ஷத்தாலே சாஸ்த்ரத்தையும் க்ரமத்தையும் மீறிச் சொல்லி விடுவார்களென்று சாஸ்த்ரமேயன்றோ சொல்லி வைத்தது. தேசிகனுடைய ஸம்ஸ்க்ருதஸூக்தி ஏதேனுமிருந்தால் காட்டுங்கள்.

(நாங்கள்) ஸ்வாமி தேசிகன் சரணாகதி தீபிகையென்றே பெயரிட்டு ஸாதித்ததாய், சாஸ்த்ரார்த்தஸாரஸர்வஸ்வமான சரணாகதி தீபிகையில் (28) "கர்மஸ்வநாதி விஷமேஷு ஸமோ தயாலு; ஸ்வேநைவ க்ல்ப்த மபதேசமவேக்ஷமாண:, ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த ஸ்வாபாவிகம் தவ ஸுஹ்ருத்த்வமிதம் க்ருணந்தி" என்பது நிதி புதைத்துவைத்த சுலோகம். இதில் (ஸ்வேநைவ க்ல்ப்தம் அபதேசம் அவேக்ஷமாண:) என்றது ஸகல துர்வாதங்களையும் ஸவாஸநமாகப் போக்குமது, தானாகவே கல்பித்துக் கொண்ட வ்யாஜ விசேஷத்தைக் கடாக்ஷித் தென்றது அதிவாதமா? இதற்குமேல் (ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே

முகுந்த!) என்றது கண்டீரே; இதில்(த்வரஸே) என்கிற க்ரியாபதம் பேறு யாருடையதென்பதை வெட்டவெளிச்சமாகக் காட்டித் தருமே. காட்டிற்று இல்லையா சொல்லுமையா?

(தாதாசார்) இதெல்லாம் தமிழ்ப்பாட்டுக்களை யநுஸரித்துச் சொன்ன தாகையாலே முன் சொன்ன விடையே இதற்குமாம். (செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே) என்று ஏதோ அபிமான விசேஷமடியாகச் சொன்னவருடைய ச்லோகந்தானே.

(நாங்கள்) ஸ்வாமிந்! நீர் இந்த இடத்தில் இருக்கவே தகாது. இது யார் சொல்லக் கூடிய வார்த்தை? (ப்ரஹ்மாபி நரம் ந ரஞ்ஜயதி) என்ற வகுப்பில் சேர்ந்து விட்டீர் போலும். உமக்கு ஸாரமாக வொன்று உணர்த்துகிறோம்.

பகவத் கீதையில் (10-10.) "தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம், ததாமி புத்தியோகம் தம் யேந மாம் உபயாந்தி தே.' என்ற சுலோகத்தில் சங்கரபாஷ்யத்தில் "ப்ரீதிபூர்வகம் பஜதாம்" என்று அந்வயம் காட்டப்பட்டது. ஸ்வாமிபாஷ்யத்தில் (ப்ரீதிபூர்வகம் ததாமி) என்று மேலோடே அந்வயம் காட்டப்பட்டது. சங்கராசாரியர் காட்டின யோஜனையில் ஏதாவது தவறு நினைக்க முடியுமோ? ஒரு காலும் முடியாது; ஸ்வாமி எதற்காக வேறு யோஜனை காட்டினரென்று விமர்சிக்க வேண்டாமா? தேசிகன் விமர்சித்தார், சுவை பெருக எழுதினர். என்ன எழுதினர்? "ப்ரீதி பூர்வக மித்யஸ்ய பஜநாந்வயே ப்ரயோஜநம் மந்தம்" என்று சங்கராசார்ய யோஜனையில் குறைகாட்டிவிட்டு "ததாமீத்யநேந அந்வயே மஹத் ப்ரயோஜனம் அஸ்தி" என்றார்; அந்த மஹத்தான ப்ரயோஜனம் இன்னதென்பதை "பரமோதாரத்வாதி பகவத்குண கணப்ரகாசநேந" என்கிற ஸ்ரீஸூக்தியால் விளக்கியருளினர், இங்கு உமக்கு விஷயம் புரிந்ததா? எம்பெருமானை நாம் நிரதிசய கல்யாண குணநிதியாகக் கொள்ளுமவர்கள். அவனுடைய திருக்குணத்திற்கு ஏற்றம் விளங்கும் வகையை நாம் ஆதரிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்; அப்பெருமான் தன்னுடைய பொருளான நம்மைத் தான் தேடுகிறான்: தேடிப் பிடிக்கிறான்; பிடித்து அநுபவிக்கிறான்; அநுபவித்து மகிழ்கிறான்; மகிழ்ந்து தன்னை மறக்கிறான்; தேடியுங் கிடைக்காத காலத்திலே கதறி யழுகிறான்; அழுகைக்குப் பரிஹாரம் நேர்ந்தபோது மதுவனம் புக்க வானர முதலிகள் போலே துள்ளுகிறான் .... என்றித்தகைய சுவைமிக்க பொருள்களை ஆழ்வார்களுடையவும் ஆசாரியர்களுடையவும் வழியைப் பின்சென்று தேசிகன் அபரிமிதமாக அநுபவித்து நம்மையும் அநுபவிப்பித் திருக்க, ஓரிழவு மறியாதே "யானும்எமரும் அவரை நூறு தடவை கண்டித்திருந்தும் அவர் பரகத ஸ்வீகார மென்கிற அஸத்தான அர்த்தத்தையே திருப்பித் திருப்பி யெழுதி வெளியிட்டு வருகிறார்" என்றால் இந்த வஞ்சனை வலையில்பாமரர்களுங்கூட சிக்கமாட்டார்களே. நம்முடைய ஸித்தாந்தம் இன்னது, தேசிக திவ்யஸூக்திரஸம்இத்தகைத்து என்றுணரமாட்டாமல் கிலோத்பாடி வானரதின் படியிலே கிடந்து திண்டாடுவதில் என்ன பயன்? இப்படியா ஒரு ஜன்மம்!

(தாதாசார்) *பரிஹாஸ விஜல்பிதம் ஸகே! பரமார்த்தேந ந க்ருஹ்யதாம் வச:*என்ற காளிதாஸருடைய வாக்கை நினைவூட்டுகிறேன். ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத்

ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாதிப்பது தத்வார்த்தமே யொழிய வம்புப் பேச்சன்று கண்ணைத் துடைக்கிற பேச்சன்று. கடைத் தெருவு புராணமன்று. "வரத தவ கலு ப்ரஸாதாத் ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்" என்கிற கூரத்தாழ் வான் ஸ்ரீஸூக்தியைக் கொண்டன்றோ தேசிகன் ஸாதித்திருப்பது. *கர்த்தா சாஸ் ரார்த்த வத்த்வாத்* என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தை ஸாமான்ய விஷயமாக்கி அதை யெடுத்துக் கழித்துவிட்டு. "இவன் தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும் அவன் கடாக்ஷமடியாக வருகையால்" என்று ஸாதித்தும். "அவன் ஸஹகரி யாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு அவன்காட்டின வுபாயத்தை அவன் துணைசெய்ய அனுஷ்டித்து" என்று ஸாதித்துமிருப்பது ப்ரலயத்திலும் அழியமாட்டாத வார்த்தைகள். இதற்கு மேல் "பராதீன கர்த்ருத்வமுடையனான இந்த சேதனனை ஸ்வாதீன ஸர்வவிஷய அப்ரதிஹத கர்த்ருத்வமுடைய அவனோடே துல்யமாக இரண்டாம் ஸித்தோ பாயமாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று" என்று ஸாதித்திருப்பதில் விவேகியான என்று விசேஷித்திருப்பது என் போல்வாரை அவிவேகிகளென்று கழித்தபடியல்லவா? இதற்கும் மேலே "உபாய பூதனான அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜமாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக வெண்ணுகை உசிதமன்று" என்று கல்வெட்டும் செப்பேடுமாக ஸாதித்திருப்ப தன்மேல் வாய்திறக்க வழிதானுண்டோ? எம்பெருமானைப் பற்றுகிறவன் இவன் தானாயிருக்கையாலே ஸ்வீகாரம் ஸ்வகதம்போல் தோன்றினாலும், "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ" என்று அவன்தான் சொல்லியிருந் தாலும், விடுவிப்பவனும் பற்றுவிப்பவனும் அவனேயென்பதாக தேசிகன் திரு வுள்ளம் தேறிவிட்டபடியால் ஸ்வகதம்போல் மேலெழத் தோற்றுகிற ஸ்வீகாரத்தை உண்மையில் பரகத மென்றுதான் இசைந்து தீரவேண்டும். தேசிகனன்றோ இப்படி சதுரச்ரமாக உபபாதித்துவிட்டார்.

(நாங்கள்) வந்தீரா வழிக்கு? "காஞ்சீபுரம் ஸ்வாமி உலக வஞ்சனையாக எழுதிவிட்டாரென்ற தெல்லாம் பாமர வஞ்சகமே யென்று இசைகிறீரா? வெறு மனே இசையாமல் அஞ்ஜலி பந்தத்துடன் இசைகிறீரா?சொல்லித் தொலையுமையா

(தாதாசார்) அவஸரப்பட வேண்டாம்; தேசிகன் ரஹஸ்யத்ரய ஸாரத்தின் முடிவில்" "கலகண்டகனுஸ்வாத்யே காமஸ்யாஸ்த்ரே நிஜாங்குரே, நிம்பவ்ருத்தி பிருத்கீர்ணே ந குத: பரிதப்யதே. என்று அற்புதமாக வொரு ச்லோகமருளியி ருக்கிறார். நிம்பவ்ருத்திகளென்று ஒட்டகங்களுக்குப் பெயர்; அவற்றுக்கு வேப்பிலை. ருசிக்குமே யொழிய மாந்தளிர் ருசிக்காது; குயில்களுக்குத்தான் அதுருசிக்கும் என்று ஸாரமாகச் சொல்லி ஸாரத்தைமுடித்திருக்கிறார் தேசிகன். இப்போது நாம் சர்ச்சித்த விஷயங்கள் (அதாவது) தேசிகன் "விவேகியானவனுக்கு உசிதமன்று" என்று தலைக்கட்டியிருக்கிற விஷயங்கள் நிம்பவ்ருத்திகளுக்கு ரஸிக்கமாட்டாதவை யென்று ஸ்வாமி தாமே காட்டிவிட்ட படியாலே நிம்பவ்ருத்திகளின் கோஷ்டியில் அக்ரகண்யனாயிருக்கிற நான் அவற்றை க்ஷேபிப்பது ந்யாய்ய மேயன்றோ? ருசிக்கமா ட்டாத பொருளை மறுத்தது தானேயாகவேண்டும். இதை விட்டிடுமின்,

(நாங்கள்.) ஸ்வாமிகளே! உங்களுடையக்ரந்தத்தில் ஒரு விஷயம் முக்கியமாக எழுதியிருப்பதாகக் கேட்டிருந்தோம்; அதாவது (நிர்ப்பந்நாதேவ) என்று தொடங்குகிற வாக்கியம் அது; இப்போது நீங்கள் ப்ரஸ்தாவிக்கிற ஸம்ப்ரதாயப்ரதிபத்தில் தானே? வேறொரு புத்தகத்திலோ? இதிலேயாயிருந்தால் அந்த இடத்தையெடுத்து வாசித்துக் காட்டுவீரா? காது குளிரக்கேட்க ஆசை.

(தாதா) ஆமாம், அது இதில் தான்; அந்த விஷயம் நான்தானெழுதியது. அந்த பங்க்தியை வாசிக்கிறேன் கேளுங்கள்; —

"நிர்ப்பந்தாதேவ க்ருதபுண்ட்ர விபர்யாஸா: ஸ்ரீரங்கதேவஸ்தாந புருஷா:; இதம் தத்க்ஷேத்ரஸம்பந்தி ஐதிஹ்யம் அநுவர்த்ததே; ச்ராத்தே நிமந்த்ரிதை: கில போஜநாந்தே த்ருப்திகதநாவஸரே பகவதாலய குஞ்சிகாஸு தத்தாஸ்வேவ த்ருப்தோஸ்மீதி கதயிஷ்யாம இதி ச்ராத்தகர்த்தாரம் நிர்ப்பத்ய தஸ்மாத் தேவாலயாதிகார ஆச்சிந்ந இதி."

என்றெழுதியிருக்கிறேன். (அதாவது) கோயிலொழுகில் எழுதப்பட்டிருக்கிற ஐதிஹ்யமிது. உடையவர் காலத்தில் ஒருவர் ச்ராத்தம் பண்ணவேண்டியிருந்ததாம். ஸ்ரீரங்கதேவஸ்தானத்தின் ஆதீனம் முழுவதும் அவருடையதாயிருந்ததாம்; அவர்க்கு அமுதனாரென்று பெயராம்; அவர் தான் செய்ய வேண்டிய ச்ராத்தத்தில் நிமந்த்ரணம் புஜிக்க ஒருவரும் இசையாமையினால் உடையவரிடம் வந்து நிமந்த்ரணத்திற்கு யாரையாவது அனுப்பவேணுமென்று வேண்டினாராம். இவரிடமிருந்து தேவஸ்தான ஸாம்ராஜ்யத்தைப் பறிமுதல் செய்வதற்கு இதுதான் நல்லதருணம்' என்று கருதிய உடையவர் கூரத்தாழ்வானையழைத்து (கர்ணே ஏவமிவ) என்னுங்கணக்கிலே ஸதுபாயமொன்று சொல்லிக்கொடுத்து நிமந்த்ரணத்திற்கு அனுப்பினாராம். நியமனப்படி கூரத்தாழ்வான் சென்று புஜித்து விட்டு, முடிவில் (த்ருப்தாஸ்ஸ்ம:) என்று சொல்ல வேண்டிய ஸந்தர்ப்பத்தில் "கோவில் சாவிகளை நமக்கு அர்ப்பணம் பண்ணினாலொழிய த்ருப்தி சொல்லமாட்டோம்" என்றாராம். போக்தா த்ருப்தி சொல்லாவிடில் ச்ராத்தம் கெட்டுப்போகுமேயென்று அஞ்சின அவர் கோவில் சாவிகளையெல்லாம் எதிரே கொண்டு வைத்து உதகதாராபூர்வகமாக அர்ப்பணம் செய்தாரம். பிறகு த்ருப்தோஸ்மி யென்று சொல்லியெழுந்துஅந்தச் சாவிகளைக் கொண்டு ஸ்ரீ ராமாநுஜரிடம் கொடுக்க, அவர் "தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே" என்று வாழ்த்தும் படிக்கு ஸ்ரீரங்க தேவஸ்தானத்தை முற்றும் ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு யதேஷ்டமாகத் திருத்தினார். அந்தத் திருத்தங்களிலே புண்ட்ரத்திருத்தம் தலையானது. முன்பு வடகலை நாமமணிந்து கொண்டிருந்தவர்களை யெல்லாம் வலிந்து நலிந்து தெங்கலை நாமமணியும்படி செய்துவிட்டார். அது முதலாகத் தான் ஸ்ரீரங்கம் தென்கலையாய் விட்டதே யொழிய அதற்கு முன்பு எல்லாம் வட கலையாகவேயிருந்த தென்று யதார்த்தத்தை யெழுதியிருக்கிறேன்.

(நாங்கள்) அதற்கு முன்பு வடகலை நாமந்தானிருந்த தென்பதற்கு என்ன அத்தாட்சி?

(தாதா) அத்தாட்சி கொஞ்சமா நஞ்சமா? உத்தரவீதி மதிள் சித்திரைவீதி மதிள் அடைய வளைந்தான் மதிள் இன்னும் பல சுவர்கள்— இவற்றிலே ராமாநுஜர் காலத்திற்கு முன்னே சுண்ணும்பினுலும் காவியினுலும் போட்ட வடகலை நாமங்களின் வடிவு இன்னமும்தெரிகிறதே; நீங்கள் ஸ்ரீரங்கம்போனதில்லையா?

(நாங்கள்) அது ஸரி, ரொம்பஸரி; உடையவர் தான் இப்படி விஷமம் பண்ணினுர் என்பதற்கு ஏதேனும் அத்தாட்சியுண்டோ!

(தாதா) ஏனில்லை. முக்கியமாக ஒன்றே பாருங்கள்; இப்போது ஸ்ரீரங்கத்தில் தீர்த்தமர்யாதைகளை யநுபவிக்கிறவர்கள் உடையவருடைய ஆசார்ய குடும்பஸ்தரும் சிஷ்யகுடும்பஸ்தர்களும் தவிர வேறு யாராவது இருக்கிறுரா? என்று பாருங்கள். எங்க தாதாசாரியர்கள் அநாதிகாலமாக அங்கேயிருக்க, அவர்களுக்கு ஒரு சிறப்பாவது செய்திருக்கிறுரா? அர்ச்சகர்கள் மட்டும் இவருடைய நிர்பந்தத்திற்கு ஆட்படாமல் பழையபடியேயிருந்து வருகிறுர்கள். ஒரு சாத்தானிக்குக் காஷாயம் கொடுத்து குல்லாயும் கொடுத்து ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியில் முன்னே நிற்க வைத்து பஞ்சமுத்திரைகளும் சாதிக்கச் செய்திருப்பது உடையவர் தவிர வேறொருவர்க்கு ஸாத்தியமாகுமா? 5, 6 நாள்கள் அரையர்கள் கையில் ஸ்ரீசடாரியைக் கொடுக்கச் செய்து அவர்கள் கையினுல் ஸகலகோஷ்யாருக்கும் அர்ச்சகர்களுக்குங் கூட சாதிக்கச் செய்திருப்பது ராமாநுஜருடைய காரியமேயொழிய வேறொருவர் காரியமாகுமா? இவற்றுக்காக "ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்" என்று கோஷிக்கச் செய்து வருவது எவ்வளவு அக்ரமமானது. இந்த கொடிய ஆஜ்ஞை இத் தென்திசையில் விளங்குவது போதாமல் "திகந்த வ்யாபிநீ பூயாத்" என்று சொல்லி கோஷிப்பதும், அதை லோக ஹிதைஷியாகச் சொல்லுவதும் எவ்வளவு அஸஹ்யமானவை! இதையெல்லாம் உட்கொண்டே நான் "நிர்ப்பந்தாதேவ" என்கிற அந்தவாக்யத்தைக் கூசாமலெழுதினேன். இதில் என்னதப்பு?

(நாங்கள்.) தப்பு என்று யார் சொன்னுர்? எழுதினது நீர்தானே, இந்த புத்தகத்தில்தானே யென்று கேட்டோமே யொழிய வேறொன்றுமில்லை. மறுபடியும் சொல்லுகிறோம்: தேசிகர் தத்வடீகையில் மிகவும் அஸமஞ்ஜஸமாக எழுதிவிட்டாரென்று வரைந்தவரும் நீர்தானே? அதுவும் ஸம்ப்ரதாய ப்ரதீப மென்கிற இந்த புத்தகத்தில்தானே? என்பதே ஜிஜ்ஞாஸை.

(தாதா) அது எழுதினது நான்தான். ஆனுல் இந்தபுத்தகத்தில் அல்ல; ரூபபரிசுத்தி யென்று ஒன்றுஎழுதினேன்; அதில்தான் நீங்கள் கேட்கும் தத்வடீகாதூஷணத்தை வித்வான்கள் உகக்கும் வண்ணம் எழுதியிருக்கிறேன். அந்த விஷயத்தைச் சொன்னுல் உங்களால் புரிந்துகொள்ளமுடியாது. அந்த விசாரத்தை விட்டிடுங்கள்.

(நாங்கள்) அந்தவிஷயத்தை இப்போது நாங்கள் புதிதாகப் புரிந்து கொள்ள வேண்டிய அவசியமில்லை. உம்மைப்பற்றித் திருக்குடந்தை ஆராவமுதய்யங்கார் ஸ்வாமி தேசிகபக்திதத்வமென்று வெளியிட்டுள்ள புத்தகத்திலிருந்து வெகுவிளக்கமாகத் தெரிந்து கொண்டேயிருக்கிறோம். தத்வடீகையில் தேசிகன் ஸாதித்திருக்குமொரு விஷயத்தை யெடுத்துக் கொண்டு " இது மிகவும் அஸமஞ்ஜஸம்

என்று எழுதியிருக்கிறீரா இல்லையா? என்ப தொன்றே இப்போது நாங்கள் தெரிந்துகொள்ள விரும்புவது, தேசிகன் ஸாதித்தது உண்மையில் ஸமஞ்ஜஸமா. அஸமஞ்ஜஸமா என்கிற ஜிஜ்ஞாஸை எமக்கில்லை. வழிதப்பிப் பேசாமல் ருஜுவானவழியில் நின்று பேசுவீராக.

(தாதா.) நான் ஏகாந்தமாக உள்ளே யெழுதிவைக்கவில்லை' நல்லகாகிதத்தில் நல்லஅச்சில் பதிப்பித்து நாடறிய வெளியிட்டிருக்கிறேன். இதைப்பற்றி ஸாரமாகச் சொல்லுகிறேன் கேளுங்கள்; கீழே ராமாநுஜரைப்பற்றிச் சொன்னேனல்லவா? அதனால் எனக்கு ராமாநுஜரிடத்தில் பக்திக்குறைவு என்றுஅர்த்தமா? உண்மையான தவறை உள்ளபடி யெடுத்துக்காட்டாமலிருக்க முடியுமா? தகப்பனார் பொடிபோடுகிறவராயும் வேச்யாக்ருஹப்ரவேசம் பண்ணுகிறவராயுமிருந்தால் அந்த அவத்யங்களை ஒருவர் எடுத்துக் கூறினால் இல்லைசெய்துவிடுவது யோக்யனுடைய செயலாகுமா? தாவதா தகப்பனாரிடத்தில் பக்தி குறைந்துவிடுமோ? ஸ்ரீபாததீர்த்தம் ஸ்வீகரிப்பதில் குறையுண்டாகுமோ? ராமாநுஜர் சூதுவழியால் கோவில் சாவிகளைப் பறித்ததும் நிர்ப்பந்தப்படுத்தி புண்ட்ரவிபர்யாஸங்கள் செய்ததும் அப்ராம்மணனுக்குப் பஞ்சமுத்ரை ஸாதிக்கச் செய்ததும், பெருமாளுக்குப் பர்யாயமான ஸ்ரீசடாரியை அரையர்கள் கையில் கொடுத்துவிடும்படி நியமனம் செய்ததும், நம்மாழ்வார்க்கு மிக முந்தினவர்களான முதலாழ்வார்களுக்கும் திருமழிசைப் பிரானுக்குங் கூட நம்மாழ்வாருடைய திருவடி நிலையை ஸாதிக்க ஏற்பாடு செய்து வைத்ததும் .... இப்படிப்பட்ட மற்றும் பல செய்திகளும் உண்மையில் வெறுக்கத்தக்கவையா யிருப்பதனால் வெறுத்து எழுதினேனென்பது தனிப்பட்ட விஷயம். அதற்காக யதிராஜஸப்ததி சொல்லாமலிருக்கிறேனா? உடையவரைத் தொழாமலிருக்கிறேனா? இதேபோல, தேசிகன் அஸமஞ்ஜஸமாக எழுதினதை அஸமஞ்ஜஸ மென்கிறேன். தாவதா எனக்கு தேசிக பக்தியில் குறை கூற முடியுமா என்ன?

(நாங்கள்) தேவரீர் மஹாவிவேகியென்றும் ப்ராமாணிகரென்றும் தெரிகிறது. * ந புத்திபேதம் ஜநயேத்* என்று கீதாசார்யன் சொல்லுகிறபடியாலே அதற்கிணங்க அபசாரங்களைக் குறைத்துக் கொள்ளலாகாதா? பகவத்ராமாநுஜ தூஷகர், தேசிகஸூக்தி தூஷகர், என்கிற அபக்யாதி உமக்குத் தகுமா?

(தாதா) வீணாகப் பிஷ்டபேஷணம் பண்ணிக்கொண்டிராதீர்கள்; ஸயூக்தியர் பலர் என்னிடம் வந்து சொன்னார்கள்; (என்னசொன்னார்களென்றால்) ச்ராத்த நிமந்த்ரணவ்யாஜேந கோவில்சாவிகளைப் பறித்துக் கொண்டது பிற்காலத்துக் கதையேயொழிய உடையவர்காலத்துக் கதையன்று— என்றும், தத்வடீகாஸூக்தியை அஸமஞ்ஜஸமென்று ஏதோ ப்ரமித்து எழுதி விட்டேன்; பிறகு உபபத்திகளை வல்லார்வாய்க் கேட்டுத் தெரிந்து கொண்டதனால் "அஸாமஞ்ஜஸ்யம் பஹூ அஸ்தி" என்றெழுதினதற்கு அநுதபிக்கிறேன் என்றும் எழுதிப் பிரசுரம் செய்துவிடும்படி பலர் சொன்னார்கள்; நிர்ப்பந்தித்தும் சொன்னார்கள். தொள்ளாயிரம் வருஷங்களுக்கு முன் தோன்றிய கோயிலொழுகை யார் தாம் மாற்றிவிடமுடியும்? தத்வடீ

கோக்தியில் மூன்று காரணங்களினால் அஸாமஞ்ஜஸ்யம் வெட்டவெளிச்சமாகத் தோற்றுநிற்க, அதைப் பரிஹரிக்க ஒருவரும் முன்வாராமலிருக்க, வஸ்துத: அஸமஞ்ஜஸமான அவ்வுக்தியில் உபபத்திகளை வல்லார்வாய்க் கேட்டுத் தெளிந்தேனென்று உயிர்போனாலும் என் கையாலெழுத மாட்டேனென்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டேன். நான் விட்டாலும் இதரமதஸ்தர்கள் விடார்களே எதை? தத்வடீகை அஸமஞ்ஸமென்று நிருபிப்பதை.

(நாங்கள்) ஸ்வாமிந்! கடைசியாக ஒன்று கேட்கிறோம், உள்ளபடி சொல்லிவிடும்; தேசிகோக்திகளில் உமக்கு அஸாமஞ்ஜஸ்யம் தோன்றினதுபோல் மற்றும் பலர்க்கும் தோன்றலாமன்றோ? உம்மைப் போல் படித்தவர்கள் பலருண்டே; அவரவர்களுக்கும் ஒரோ விஷயங்களில் அஸாமஞ்ஜஸ்யம் தோன்றி அதை வெளியிடவும் அபிப்ராயமுண்டானால் தாராளமாக வெளியிடலாமன்றோ? „தேசிகன் அஸமஞ்ஜஸமாக ஒருகாலும் ஒருவரியும் எழுதமாட்டார்" என்று ப்ரதிஜ்ஞைபண்ணி ப்ரதிவாதம் பண்ணக் கிளம்ப உம்மால் முடியாதுதானே. அப்படி கிளம்பினால் உமக்கே லஜ்ஜையாகத் தானேயிருக்கும். தன்மாதாவை ஸ்வைரிணியென்று தானே கெஜட்டில் போட்டுப் ப்ரசுரம்செய்பவன், பிறர் அப்படிச் சொன்னால் அவர்களிடம் ஸ்ரீபாத தீர்த்தம் ஸ்வீகரிக்கவேண்டியதுதானே, நின்று பதில் சொல்லும்

(தாதா) ஓகோ! இப்படி கேட்கிறிகளோ? இதற்கு ஸஹஸா பதில் சொல்ல முடியாது; கொஞ்சம் ஆலோசனை பண்ணித்தான் சொல்ல வேண்டியதாகும். நம் வீட்டுப் பையனை நாம் அடிப்பதும் திட்டுவதும் ஸஹஜம்; பக்கத்தாத்துக்காரர் அடிப்பதும் திட்டுவதும் செய்தால் அது ஸஹ்யமாயிருக்குமோ? நான் வ்யாபகனுகையாலே உள்ள தோஷத்தைக் கண்டுபிடித் தெழுதினேன்; என்னைப் போல் வேறு வியாபகர் யார்? வியாபகர் இருந்து வடகலையாயிருந்தால் திட்டலாம்.

(நாங்கள்) ஸ்வாமிந்! இப்போது நீர் சொன்னதுஸரி; தேசிகனை அஸமஞ்ஜஸவாதியென்று தூஷிப்பதற்கு வடகலையாருக்குத்தான் அதிகார முண்டென்றும் அதற்கு அவர்களே லைசன்ஸ் வாங்கியிருக்கிறார்களென்றும், அவர்கள் யாராயிருந்தாலும் அவர்களுக்குத்தான் தூஷிக்க ஹக்குண்டென்றும், இதற்காகவாவது வடகலை யோனியில் பிறந்தாக வேணுமென்றும் உம்முடைய வாக்யார்த்தம் முடிவு பெற்றது. ஸரி; ரொம்ப ஸரி; தேசிகன் உங்காத்துப்பிள்ளை என்பது தேறி விட்டால் தாராளமாக நீரும் நுமரும் அவரைத் திட்டலாமடிக்கலாம்; அவருக்கும் உங்களுக்கும் ஒருஸம்பந்தமுமில்லை யென்பதும் ஸ்நாநப்ராப்தி கூட இல்லையென்பதும் கல்வெட்டாகியிருக்க நம் வீட்டுப்பையனையென்கிற த்ருஷ்டாந்தம் காசுக்குதவாதே.

(தாதா.) இப்போது என்மனம் ஸரியாயில்லை. தலைசுற்றலும் மனக்குழப்பமுமாயிருக்கிறது; இன்று இவ்வளவோடு ஸபாவிஸர்ஜனம் செய்துவிடுவோம்: மறுபடியும் நாளைக்குச் சேருவோம். என்னுடைய நூல்களில் சர்ச்சிக்கவேண்டியவை பலபலவுண்டு அதை நாளைக்கு வைத்துக் கொள்வோம்..... (நிஷ்க்ராந்தா:)

முதல் ஆன்ஹிகம் முற்றிற்று - இனி இரண்டாவது ஆன்ஹிகம்

அப்படியே அடுத்தநாள் கூடியாயிற்று; தாதாசாரியாரை நாங்கள் வணங்கி

விண்ணப்பம் செய்தோம். நேற்றிரவு நாங்கள் கூடிப் பலபுத்தகங்களைப் புரட்டின தில் நூறு விஷயங்களுக்குமேல் உம்மைக் கேட்க வேண்டியவையாகத் தேறியுள்ளது அந்த விஷயங்கள் யாவும் உம்முடைய நூல்களுக்கு ஸம்பந்தப்பட்டவையே யொழிய இன்று புதிதாகக் கிளப்பப்படுமவை யல்ல. *சித்ரபுங்க ப்ரகாசாநாம் வித்யுத் ஸத்ருசவர்ச்சஸாம், ஸ்மரந் ராகவபாணுநாம் விவ்யதே ராக்ஷஸேச்வர:* என்கிறப் போலே உம்மேல் விழுந்திருக்கிற அம்புகள் அளவு கடந்தவையல்லவா? விழுந்த அம்புகள் நூறுக்கு மேற்பட்டிருக்குமல்லவா? ராவணன் மீதுகூட அத் தனையம்புகள் விழுந்திரா தல்லவா? அவ்வம்புகளால் ஏற்பட்ட புண் ஆறியிருக் கிறதா இல்லையா என்று நாங்கள் தெரிந்துகொள்ள வேண்டாமா? ஸம்ப்ரதாய விஷயங்களைப் பற்றி நாளைமுதல் சர்ச்சிப்போம். அவற்றுக்கு மத்யஸ்தர்கள் தேற மாட்டார்களன்றோ? உலகிலுள்ள ஸகலமதஸ்த பண்டிதர்களும் கேட்டுச் சிரிக்கவோ அழவோ தகுந்த பேஷான விஷயம் இன்று கேட்கிறோம். கேட்கலாமா?

(தாதாசார்) ஸ்ரீஜயந்திக்கு மறுநாள் உறியடியுத்ஸவமென்று ஒன்று நடக்கும் மேலே பக்ஷணங்களை முடிப்பாகக் கட்டிவைத்து, அதை ஒரு இடையன் தடியாலடித்து கைப்பற்ற வேண்டியதென்று நிபந்தனையாகும். பெரிய தடிகொண்டு இடையன் அடிக்கத் தொடங்குவன். கங்காளம் கங்காளமாக மஞ்சள் நீரை நிரப்பிவைத்துக் கொண்டிருந்து நால்வர் ஐவர் அவ்விடையன் மீது அத்தண்ணீரை வாரிக்கொட்டிக் கொண்டே யிருப்பர்கள். அவனோ தடிகொண்டு அதை அடிக்க முடியாதபடி திக்கு முக்கலாடி நிற்பன். என்னசெய்வன் பாவம்! அதற்கென்று ஒப்புக்கொண்டு வந்து நின்றபிறகு பின்வாங்க முடியுமா? எதையும் சகித்துக் கொண்டுதானாக வேண்டும், நானே வினு விடைகளுக்கு இசைந்து வந்து விட்டபடியால் படுவதெல் லாம் படவேண்டியதுதானே. கேளுங்கள். எதையும் உள்ளபடிதான் சொல்லுவேன்.

எங்களில் ஒருவரான பத்மநாபாசாரியர் இன்று கேள்விகள் கேட்கிறார்.

(பத்மநாபர்) அப்பய தீக்ஷிதர் செய்த குவலாயனந்தத்தை புதரஞ்ஜநி யென்கிற வியாக்கியானத்தோடு கூட நீர் உமது உத்யான பத்ரிகையில் அச்சிட்டு வருகையில் உமக்கும் காஞ்சிஸ்வாமிக்கும் பத்ரிகாஸம்வாதம்நடந்ததே அது நினை விருக்கிறதா?

(தாதா) அது பதினைந்து வருடங்களுக்கு மேல் ஆய்விட்டது. ஏதோ ஸிதா ஸிதமாக நினைவிருக்கிறது. அப்போது பல விஷயங்களில் நான் பங்கப்பட்டதுண்டு மண்ணுலகம் மட்டுமன்றிக்கே விண்ணுலகுமறிந்த அதை மறைக்க முடியுமா என் றால்? இப்போது எந்த விஷயத்தில் உமக்கு ஜிஜ்ஞாஸை?

(பத்மநாப) விளங்கச் சொல்லுகிறேன், கேளும். திருவாய்ப்பாடியில் இடை யர்கள் தேவேந்திரபூஜை செய்ய முயன்றபோது, அதைத் தடுக்க நினைத்த கண் ணன் *யோ வை ஸ்வாம் தேவதாமதியஜதே - ....*இத்யாதி வேதவாக்யத்தைச் சொன்னதாக வைத்து, அந்த வேதவாக்யத்தை அநுவதித்த தேசிகன் "அதிய ஜேத நிஜாம் யதி தேவதாம் உபயதச் ச்யவதே ஜுஷதேப்யகம்" என்று ச்லோக மாக்கினதில் மூன்றுவது பாதத்தில் நடந்த சர்ச்சையைப் பற்றிக் கேட்கிறேன் நினைவுக்கு வருகிறதா?

(தாதா) இவ்வளவு சொன்ன பிறகும் நினைவுக்கு வாராமலிருக்குமா? அதை நானே விளக்கிச் சொல்லுகிறேன். அதில் மூன்றுவது பாதத்தை "க்ஷிதிப்ருதைவ ஸதைவதகா வயம்" என்று நான் அச்சிட்டு விட்டேன். ஆனால் நான் அச்சிட்ட புதரஞ்ஜநீவ்யாக்யாநகாரர் 'ஸதைவதகா:' என்கிற பாடத்தைத் தள்ளி 'ஸதேவதகா:' என்று பாடங் கொண்டு, அது அஸாதுவென்று சிலர் சங்கிக்கக் கூடுமென்று அதற்கு உபபாதகமான வியாகரணஸூத்ரமும் காட்டியிருந்தார். என்னுடைய மூளையில் அது ஒன்றும் ஏறுமையினுலேயே, இந்த வியாகரண ஸூத்ரம் இங்கு எதற்காகக் காட்டப்பட்டதென்று கூட ஆலோசிக்கமாட்டாமல் (ஸதைவதகா:) என்கிற பாடத்தை அச்சிட்டு விட்டேன். இது தானே நீர் கேட்பது?

(பத்ம.) ஸ்வாமீ! மேல் நிகழ்ச்சியைச் சொல்லாமல் ஸ்ரீமத்கம்பீரமாக அவ்வளவோடு நிறுத்தி விட்டீரே என்ன? அவ்வளவு தான் விஷயமோ? அதற்கு மேல் ஒன்றுமில்லையோ?

(தாதா) ஏனில்லை? ஒரு பாரதம் நடந்திருக்கிறதே. அந்த குவலயானந்த வியாக்யானம் அப்போது மாதப்பத்ரிகையில் சேர்ந்து வெளிவந்து கொண்டிருந்தது; அதைக் கடாக்ஷித்த உங்கள் ஸ்வாமி தவறுதலையெடுத்துக் காட்டி, என்னுடைய மருளை விளக்கிப் பத்ரிகையச்சிட்டார், பிறகு நான் விழித்துக் கொண்டேன் அடுத்த என் பத்ரிகையில் சோதனம் வெளியிட்டேன். (அதாவது) ஸதைவதகா: என்று அச்சிட்டது மருள்; ஸதேவதகா: என்று திருத்திக் கொள்கவென்று திருத்தம் வெளியிட்டேன்.

(பத்ம) திருத்தம் வெளியிட்டது ஸரி; "காஞ்சீஸ்வாமியினுடைய உத்போதனத்தினுல் இந்தத் திருத்தம் தெரிவிக்கப்பட்டது" என்றெழுதினீரோ?

(தாதா) என்னஸ்வாமீ! இப்படிகேட்கிறீரே? அப்படிகூட வெளியிடமுடியுமா? க்ருதயுகத்திலுங்கூட நடக்கமாட்டாதது கலியுகத்தில் எப்படியையா நடக்கும்? அப்போது நடந்த வாதப்போர் ஸாமான்யமானதா? அந்த நிலையில் நான் தெய்வமே யென்று சோதனம் வெளியிட்டதே மிகையாயிருக்க "ஸ்வாமியினுடைய ஸமுத்போதனத்தினுல் தெளிந்தேன்" என்று மானியான மனிதன் எழுதுவானு?

(பத்மநா) அது ஸரி;அந்த உமது சோதனம் வெளி வந்தபிறகு காஞ்சீஸ்வாமி யெழுதி வெளியிட்டது நினைவிருக்கிறதா? நானே நினைவூட்டுகிறேன் கேளும் "உமக்கும் நமக்கும் நேர்ந்துள்ள விவாதவிஷயங்கள் ஒவ்வொன்றிலும் நீர் இங்ஙனே சோதனம் வெளியிட்டுத் தீரவேண்டியது தலைவிதியாகும். இது திண்ணம் இது தவிர வேறு கதியில்லை; எத்தனை வருஷம் போராடினுலும் இதுதான் பர்யவஸான மென்பதை உலகம்காணும்" என்றெழுதியிருப்பது இப்போது நினைவுக்கு வருகிறதா?

(தாதா) அவர் இப்படி யெழுதியிருப்பது வாஸ்தவந்தான். ஸதைவதகா: என்றதைத் திருத்திக் கொள்ளவேண்டியது தலைவிதியாயிற்று ஏனென்ருல்; *ஆபோந்யதரஸ்யா மிதி ஹ்ரஸ்வ: * என்று வ்யாக்யாதா எழுதியிருப்பதை P. B. A. எடுத்துக்

காட்டிவிட்டபடியாலும், அந்த யாதவாப்யுதயச்லோகத்திற்கு மூலமான வேத வாக்கியத்தில் தைவத சப்தமின்றிக்கே தேவ.தாசப்தமேயிருப்பதாகவும் அவர் எடுத்துக் காட்டிவிட்டபடியாலும், தேசிகனும் (அதியஜேத நிஜாம் யதிதேவதாம்) என்று தேவதா சப்தத்தையே யிட்டிருக்கிறரென்று காட்டினபடியாலும் திக்குமுக்கலாடித் திண்டாடவேண்டியிருந்தது, தெய்வமேயென்று சோதிக்க வேண்டியதாயிற்று. காஞ்சீபுரம் பட்டப்பா தாதாசார்ஸ்வாமி யெழுதின ஸுபாஷித நீவி வியாக்கியானத்தில்--நித்யமாநயோ: என்றதை வித்யமாநயோ: என்று மருண்டு அச்சிட்டு விட்டேனென்று ஆறுமாதகாலம் ஓயாத விவாதம் நடந்தது; நித்யமாநயோ: என்பதுதான் ஸரியென்று பிரபலபண்டிதர்களும் நிர்ணயித்தார்கள், மாத்ருகாஸ்ரீ கோசத்தையும் கொணர்ந்து காட்டினர்கள்; * மூர்க்கச் ச மகரச் சைவ க்ருஹீதக் ராஹிணுவுபௌ *என்று சொல்லியும் ஏசினர்கள்; அதை நான்லக்ஷ்யம் செய்தேனே! வ்யாக்யாநகாரர் [பட்டப்பாஸ்வாமி] தமதுகையால் நித்யமாநயோ: எழுதியிருந்ததையுங்கண்டேன் ஆனாலும் அவரும் மூர்க்கரே அரஸிகரே என்று உடாய்த்து விட்டேனே யொழிய சோதனம் வெளியிட்டேனே?

(பத்மநா) தலை விதியாக சோதனம் வெளியிடவேண்டியிருந்தும் *விவேகிநய மேகதோ ஹ்யபிநிவேச லேசோ ஹரேத்* என்ற கூரத்தாழ்வான்ஸ்ரீஸூக்திப்படி துராக்ரஹமே கொண்டு *மூர்க்கச்'ச மகரச்சைவ சுலோகத்திற்கே லக்ஷ்யமாயிருந் தொழிந்த இடங்கள் இன்னும் நினைவுக்கு வருகிறவரையில் ஸாதித்தருளலாமோ?

(தாதா) ஆஹா; ஜாம் ஜாமென்று ஸாதித்தருளுகிறேன். *பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம* என்றச்ருதிவாக்யத்தில் " பூயிஷ்டாம் நமஉக்திம் தே விதேம என்று அந்வயித்து தேசிகன் எழுதியுள்ள விவரணத்தில் சுவையில்லையென்றும், தே பூயிஷ்டாம் நமஉக்திம்— உன் திருவுள்ளத்தாலே கனத்துத்தோற்றுகிற நமஉக்தியை— என்று நம்பிள்ளை ஸாதித்திருக்கிற பொருளே சுவைமிக்கதென்றும் எழுதியிருந்தார் உங்கள் ஸ்வாமி; நாங்கள் பலபேர்கூடி இதை மறுத்தோம். கடைசியாக, திருவாய் மொழியில்(3—3—6) * அது சுமந்தார்கட்கே * என்றவிடத்து முநித்ரயத்தார்க்குத் தலைவரான ஸாக்ஷாத்ஸ்வாமி தாமெழுதிய இருபத்து நாலாயிரப்படியில் „பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம* என்கிறபடியே ஈச்வரபுத்தியாலே இத்தைச் சுமையாகச்சொல்லுகிறர்" என்று ஸாதித்திருப்பதையெடுத்துக்கட்டினர் உங்கள்ஸ்வாமி; அதைக் கண்ட மற்றவர்கள் தலை குனிந்து போனர்கள்; நான் விட்டேனே வாதத்தை? அந்த ஸாக்ஷாத்ஸ்வாமி தென்னசார்ய ஸ்ரீஸூக்தி வாஸனையாலே யெழுதி விட்டார் போம்! என்று நல்ல ப்ரஹ்மாஸ்த்ரம் ப்ரயோகித்தேனே யொழிய அதற்கு இசைந்து நின்றேனே? *தொழுது மாமலர் நீர் சுடர் தூபங் கொண்டு எழுது மென்னுமிது மிகை * என்று ஆரோவொரு ஆழ்வார் சொல்லியிருப்பதாகவும் அதற்குச் சேர நம்பிள்ளை அப்படி ஸாதித்ததாகவும் தெரியவந்த்து; தேசிகன் ஸ தித்தது அஸமஞ்ஜஸம் என்பேனே யொழிய அவருடைய விவரணத்தில் சுவையில்லை யென்றல்

ஸஹிப்பேனே? தேசிகன் செய்தவிவரணம் அஸமஞ்ஜஸம் என்று ?. B. A. எழுதியிருந்தாராகில் அந்தவிவாதத்தில் நான் தலையிட்டிருப்பேனு?

(பத்ம.) இப்படி கர்ணம்ருதமான விஷயம் இன்னுமொன்று ஸாதித்தருள வேணும். பிறகு வேறு சில பல விஷயங்களில் சர்ச்சை யெடுத்துக் கொள்வோம்.

(தாதா) மிகவும் ரஸகனமானவொருவிஷயம் தெரிவிக்கிறேன் கேளும். ஸமீப காலத்தில் வெளியிட்ட என்னுடைய உத்யானபத்திரிகையில் (3—9ல் பக்கம்155ல் "பக்திஸாரः— திருமழிசையாழ்வார்." என்று மகுடமிட்டு எழுதுகையில்—,,இவ் வாழ்வார் நான்முகன் திருவந்தாதியும் திருச்சந்தவிருத்தமும் ஸாதித்தாரென் றெழுதி, இவற்றுள் திருவந்தாதி (96) தொண்ணூற்றாறுபாசுரங்கள் கொண்ட தென்றும், திருச்சந்தவிருத்தம் (126) நூற்றிருபத்தாறு பாசுரங்கள் கொண்ட தென்றும் எழுதிவிட்டேன் 126 என்று லக்கம் மட்டுமிடாமல் "ஷட்விம்சதிசத (126) காதாரூபः" என்று நிஸ்ஸந்தேஹமாகவே எழுதிவிட்டேன்; அத்யாபகஸ்வாமி யொரு வர்வந்து "திருச்சந்தவிருத்தத்தில் நூற்றிருபதுபாசுரங்களே உலகமெல்லாம் ஓதி வாராநிற்க, நீர் அதிகப்படியாக ஆறுபாசுரங்களைக் கூட்டியெழுதியிருப்பது எப்படி யென்று கேட்டார்; பட்டப்பகலில் கோட்டைவிட்டுவிட்டோமென்று தெரிந்து கொண்டேன்; ஆனாலும் அண்ணு திருவடியைச் சிந்தித்தேன்; அந்த பலத்தினுல் ப்ரத்யுத்பன்னமதியாய் விட்டேன்; அவர் வாயடங்கும்படி விடை கூறிவிட்டேன் என்ன கூறினேன் தெரியுமா? நான்முகன் திருவந்தாதித்தனியன் பாசுரமொன்றும், திருச்சந்தவிருத்தத்தனியன்களிரண்டும், * தையில் மகமின்று, * மன்னுதிருமழிசை யென்கிற உபதேசரத்தினமாலைப் பாசுரங்களிரண்டும், இயற்சாத்தில் * மழிசையர் கோன்* என்றுவரும்*ஊழிதொறு மூழிதொறு மென்கிற பாட்டுமாக ஆறுபாசு ரங்களில்லையா? இவற்றையும் சேர்த்துப் பெரியார்கள் 126 என வழங்கி வருவதாக அறிந்து நான் "ஷட்விம்சதிசதகாதா" என்றெழுதினேன் என்றேன். வெற்றிக் கொடி நாட்டிவிட்டேன். கேட்ட அத்யாபகர் "வநம்ருகः குத்ரேதி நஜ்ஞாயதே" என்னும்படி ஓடிப்போனுர். ஆழ்வாராசார்ய கடாக்ஷபலத்தினுல் சடக்கென இப்படி பதில் சொல்லத் தோன்றாமற் போனுல் தெக்கபிக்கவென்று விழிக்கவேண்டியதாக வன்றோ ஆகும. இப்படிப்பட்ட ஸமயங்களில் காஞ்சிஸ்வாமியின் கருணையையும் ஏகா ந்தமாக நினைப்பதுண்டு; மற்றொருவரால் இப்படி விரைந்து விடையிறுக்கமுடியா தன்றோ. "காளிதாஸः—குக்குடபட்டः—கௌபீநபீநः" என்று இப்படி சில மகுடங்களை யிட்டு எதையாவது எழுதித் தொலைக்காதே விரலுக்குத் தகாத வீக்கமாய் "பக்தி ஸாரः—பட்டநாதः" என்று மகுடமிட்டு தத்தகபித்தகதாலேலோ வென்றெழுதி இப்படியும் பரிபவப்படுவீரா?" என்று க்ஷேபித்தவர்களுங்கூட மூக்கில்விரலைவைக்கும் படியாகவன்றோ ஒரு நொடியில் செய்துவிட்டேன் இல்லையாகில் வாக்கில் விரலை வைக்கும்படியாகவன்றோ ஆயிருக்கும். இதை உம்மிடத்தில் அந்தரங்கமாகச் சொன் னபடி. வெளியிட்டு என்மானத்தை வாங்கவேண்டாம்.

(பத்ம.) இவ்விடத்தில் எனக்கொரு கதை நினைவுக்கு வருகிறது. சொல்லுகி றேன் கேளும். ஒருவர் மகளுக்கு மணம்செய்ய முகூர்த்தம் வைத்துக்கொடுக்கும் படி ஒரு புரோஹிதரிடம் கேட்டுக் கொண்டார், அவர் நடைபெறும் வருஷத்துப்

பஞ்சாங்கத்தைப் பாராமல் ஞாபகப் பிசகாய் சென்ற வருஷத்துப் பஞ்சாங்கத்தைக் கொண்டு பார்த்துவிட்டு ஆனிமாதம் ஆறுந்தேதி நன்றாயிருக்கிறது; அன்றைக்கு நடத்திவிடலாமென்று எழுதிக் கொடுத்து விட்டார், அவர்தாம் பார்த்த பஞ்சாங்கத்தின்படி அது நல்ல முகூர்த்தநாள்தான் ஆனல் நடைவருஷத்துப் பஞ்சாங்கப்படி அமாவாசையும் கிருத்திகையும் சனிக்கிழமையுமாயிருந்தது. கலியாணக்காரன் யதாஜாதனுகையாலே நாளது ௬ ஆனிமாதம் ஆறுந்தேதி திருமணமென்று பத்ரிகை அச்சிட்டுப் பலர்க்கும் அனுப்பிவிட்டான். உறவினரொருவர் ஓடிவந்து "என்ன, இப்படியா ஒரு முகூர்த்தமிடுவது? யாரிட்டுக்கொடுத்தது" என்று கடிந்தார். அவரோ ஒன்றுமறியாதவர், வந்த உறவினரைப் புரோஹிதரிடம் அழைத்துக் கொண்டுபோய் 'நீங்கள் வைத்துக் கொடுத்த முகூர்த்தம்கெட்டதாமே, பாருங்கள்'என்றார். புரோஹிதர் கவனித்துப்பார்த்தார், மோசம்போனதையுணர்ந்தார்; ஆனலும் அசட்டுத்தனத்தை அங்கீகரிக்கக் கூடாதென்று துணிந்து, வந்த உறவினரை நோக்கி 'ஓய்! முகூர்த்தமிட்ட நாளில் க்ருத்திகைதானே; (ஆமாம்) அமாவாசைதானே? (ஆமாம்.) சனிக்கிழமைதானே (ஆமாம்) நான் கேட்டால் ஆமாம் ஆமாம் என்கிறீர்; இவரிடம் வந்து அல்ல அல்ல என்கிறீராமே,இது என்ன வேலே? என்றாராம். வந்தவர் பார்த்தார்; இவரிடம் நமது வாதம் ஒங்காதென்று தெரிந்துகொண்டு ஒன்றும் சொல்லாமலே போய்விட்டார். புரோஹிதர் வெற்றிபெற்று விட்டார். தாதாசாரியரே! இதே கதை தான் உம்முடையதும். *லாபஸ் தஸ்ய ஜயஸ் தஸ்ய குதஸ் தஸ்ய பராபவ: யஸ்ய லஜ்ஜா ச மாநச் சேத்யுபயம் தூரதோ கதம்.* பேஷ்! பலபேஷ்!! பலேபேஷ்!!!

(தாதாசார்) இப்படிப்பட்ட பலசுலோகங்கள் எனக்கும் பண்ணத் தெரியும் பண்ணியுமிருக்கிறேன். வெளியிடத் தகாதவற்றையும் உம்மிடம் வெளியிடுவது ப்ரேம விசேஷத்தாலே. நேற்று நான் கொடுத்த புத்தகங்களில் பாரிஜாதபுஷ்பம் என்கிற நூலே வாசித்தீரோ? அதில் ரஸகனமான விஷயங்கள் நிரம்பியிருக்கின்றனவல்லவா? அதைப்பற்றி இப்போது பேசுவோமே. ஸம்ப்ரதாயப்ரதீபத்தைப் பற்றிப் பேச வேண்டியது இன்னும் அபரிமிதமாக இருந்தாலும் அதை நாளைக்கு வைத்துக் கொள்வோம். இன்று பாரிஜாத நூலேப்பற்றிப் பேசுவோம்.

(பத்ம.) எனக்கொரு பெரிய ஜிஜ்ஞாஸை. இப்போது நாம் பேசுகிற க்ஷணம் வரையில் நீர் என்ன என்ன எழுதியிருக்கிறீரோ, அத்தனையும் ஓரக்ஷரம் விடாமல் தீயினில் தூசாக்கப்பட்டிருக்கிறதே தெரியுமா? எல்லாவற்றையும் ஒன்று விடாமல் பார்த்திருக்கிறீரா? பார்த்திருந்தால் நீர் நாலுபேரெதிரே முகங்காட்டி நிற்க முடியாதே; நீரோ முகங்காட்டிக் கொண்டிருக்கிறீர்; அதனல் ஸந்தேஹ முண்டாகிக் கேட்கிறேன். சீறியருளாதே ஸாதிக்கவேணும்.

(தாதா) அஸ்தாநே சீற்றம் எதற்காக? நான் அவ்வளவு அரஸிகனு என்ன? உமக்குண்டானஸந்தேகத்தை இதற்கு முன்னமே என்னிடத்தில் ஸபூத்யர்கள் பலரும் தெரிவித்திருக்கிறார்கள்; உங்கள் ஸ்வாமி பன்னிரண்டு துறைகளில் இயற்றிய நூல்கள் எழுநூறென்று ஏழெட்டு வருடங்களுக்கு முன்னமே கேட்டிருந்தேன். பிறகு இன்னமும் எண்ணிக்கை ஏறியிருக்கக்கூடும்; ஒரு புருஷாயுஸ்ஸில் ஒருவர்

வாசித்து முடிக்க முடியாதவையென்று பலரும் சொல்லக் கேட்டிருக்கிறேன்; அவற்றை முழுவதும் நான் பார்த்திருக்கிறேனென்று எப்படி புளுகு சொல்ல முடியும்? நான் வம்புச்சண்டையில் தலையிடாதவனுயிருந்த காலத்தில் பலநூல்கள் கிடைத்ததுண்டு. பார்த்ததுண்டு. பிறகு என்னுடைய ஸ்நிக்தர்கள் கொணர்ந்து காட்டி "இதற்குக் கண்டனமெழுதவேணு" மென்று நிர்ப்பந்தித்துக் கொடுத்த நூல்களைக் கண்டதுண்டு, கண்டித்ததுமுண்டு. அதாவது கண்டித்து விட்டதாக நினைத்ததுண்டு. அதன்மேல் கண்டனம் மறுநாளிலேயே சுடச்சுட வந்துவிடுமென்று எனக்கு நிச்சயமாகத் தெரியும்; அப்படியே வந்து விட்டதாகவும் கேட்டிருக்கிறேன்.

(பத்ம) ஸ்வாமிந்! கேட்டிருந்ததோடு ஸரிதானே? அவற்றைப் பெற்றும் சார்த்தும் மறுமாற்றமெழுத வேணுமென்கிற ருசியுண்டானதில்லையோ?

(தாதா) அந்த அசட்டு ருசி எதற்காக? *யோ வஜ்ரபாதாசநிஸந்நிபாதாத் ந பக்ஷுபே நாபி சசால ராஜா, ஸ ராமபாணுபிஹதோ ப்ருசார்த்தஃ சசால சாபஞ்ச முமோச வீரஃ* என்னும்படியாகத்தா னிருக்குமென்பது தெரியாத விஷயமா? இதையெல்லாம் என்வாயாலே கேட்கவேணுமென்று உமக்கு ஆசை போலும். போதும் போதும். பாரிலாத சஷ்பமென்கிற என்னூலில் செய்யத்தக்க விசாரம் ஏதாவதிருந்தால் செய்யும்; வீண் வார்த்தைகளாலே என் வயிற்றெரிச்சலை எதற்காகக் கிளப்புகிறீர்? ப்ரபந்தசாரத்தைப்பற்றி ஏதேனும் அபூர்வ விஷயமிருந்தால் சொல்லும்.

(பத்ம) வேணவிஷயங்கள் சொல்லுகிறேன். அதிருக்கட்டும். *யோ வஜ்ர பாதாசனியென்று ஏதோவொரு சுலோகம் சொன்னீரே. அது எவ்விடத்தது? யார் விஷயம்? அதைச்சொல்லும்; மேலே பிரபந்தசாரவிஷயங்கள் சொல்லுகிறேன்.

(தாதா) இதென்னவோய்! ஜ்ஞாதப்ரச்னமா? அஜ்ஞாதப்ரச்னமா? ஜிகீஷுப்ரச்னமா? உன்னுடைய அபிப்ராயம் எனக்கொன்றும் புரியவில்லை; வாயைக் கிளறி வயிற்றெரிச்சலைக் கிளப்பப்பார்க்கிறீரா? இதையெல்லாம் கெஜட்டில் பிரசுரஞ் செய்யப் பார்க்கிறீரா? எனக்கும் கெஜட்டு தெரியும்.

(பத்ம) ஸ்வாமிந்! கெஜட்டோ எஜட்டோ எனக்கொன்றும் தெரியாது; கோபம் வேண்டாம்; அடியேன் இதோ விஷயவிசாரத்திலேயே இறங்குகிறேன் இறங்கிவிட்டேன். ப்ரபந்தசாரத்தைப்பற்றிப் பல கேள்விகள் கேட்கிறேன். ஒவ்வொன்ருகக் கேட்டு வருகிறேன். உடனுக்குடனே பதில் சொல்லி வாரும். (முதல் கேள்வி) ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளை அருளிச் செயலென்றும் திவ்யப்ரபந்த மென்றும் வழங்காமல் ப்ரபந்தமென்று வழங்குவது திவ்யப்ரபந்தத்வேஷிகளான ஸ்மார்த்தர்களின் திரளிலே தோன்றியது. அது பிறகு ஸாமானியர்களான வைணவர்களின் வாக்கிலும் புகுந்தது. பூருவாசாரியர்கள், விசிஷ்ய நிகமாந்தமஹாகுரு பிரபந்தமென்று ஒருவர் சொல்லக் காதால் கேட்டாலும் மாய்ந்து போவரே. இக்காலத்திலொருவர் தம்முடைய திவ்யப்ரபந்தத்வேஷத்திற்கும், பூர்வாசார்ய வித்வேஷத்திற்கும் சாச்வத ஜயத்வஜமாக ப்ரபந்தரக்ஷை யென்று எழுதிவரும்படியான அவத்யம் தேசிகனிடத்தில் ஏறுமா; எங்ஙனே யேறும்? நூல்களில் பொது நிர்தேசமென்றும் சிறப்பு நிர்தேச மென்றும் இரண்டுண்டு; திவ்யப்பிரபந்த வியாக்கி

யானங்களில் கீழ்ப் ப்ரபந்தத்தால் என்றும் இப் பிரபந்தத்தில் என்றும் அருளிச் செய்வதுண்டு. அது கொண்டு "பூருவர்களும் ப்ரபந்த மென்றார்கள்" என்று காட்ட வருவது அபஹாஸ்யமாகும். ஸ்வாமி ஸ்தோத்ர பாஷ்யத்தில் *மாதா பிதா யுவதய: வியாக்கியாந-உபக்ரமத்தில் "பராசரப்ரபந்தாதபி" "உபஜீவ்யப்ர பந்த நிர்மாணக்ரமாத்" என்று ஸாதித்துள்ளார். அது கொண்டு ஸ்ரீவிஷ்ணு புராணத்தை ப்ரபந்த மென்பதுண்டோ? "பாஷ்ய ப்ரபந்தே" ச்ருதப்ரகாசிகாப்ர பந்தே" இத்யாதி பரச்சத ப்ரயோகங்களுண்டு. அருளிச் செயலை விவக்ஷித்து ப்ர பந்தமென்று வழங்குவது நவீனர்களிடத்தன்றிப் பூருவர்களிடத்து எங்குங் காண முடியாது. காண முடியுமானால் எடுத்துக் காட்டும்.

(தாதா) ப்ரபந்த பாடசாலையென்று பலவிடங்களிலும் போர்டு மாட்டிருப் பதைக் காட்டுகிறேன் வாரும். பாடசாலையினுள்ளே சென்று 'பையா! இங்கு நீ என்ன பண்ணுகிறாய்? என்று கேட்டால் ப்ரபந்தம் சொல்லிக்கிறேனென்று சொல்லாத ஒரு பையனையாவது காட்டுவீரா? இது தவிர, க்ரந்தங்களிலும் ப்ரபந்தமென்கிற வ்யபதேசத்தைப் பார்த்திருக்கிறேன் எங்கள் ஸம்பிரதாயத்தில் பிரபந்தமென்றுதான் வழங்குவது. இது நூறு வருடங்களுக்குமேல் ஆய்விட்டதே

(பந்ம) உமக்கும் லஜ்ஜையில்லை எனக்கும் லஜ்ஜையில்லை; மேலே கேட்கிறேன். தேசிகன் வரைந்தருளின குருபரம்பராஸாரத்தில் ஆளவந்தார் முதலான ஆசார் யர்களின் ப்ரஸ்தாவத்தில் "இவரருளிச் செய்த ப்ரபந்தங்கள்" என்று அஸக்ருத் ஸாதிக்கிறார். எம்பெருமானார் ப்ரஸ்தாவத்தில் "திருவாய்மொழி யோதினார்" "திருவாய்மொழிக்கு அர்த்தம் கேட்டருளினார்' என்றே ஸாதித்திருப்பதைக் காண லாம். இப்படிப் பட்ட மஹாசார்யர் ப்ரபந்தஸார மென்று பெயரிட்டு ஒரு ப்ர பந்தம் பண்ணினாரென்கை அநுவதிக்கவும் தகாததே. இது வெளிவ்யவ ஹாரங் களோடு நின்றாலும் பாதகமில்லை. "வேதாந்த குரு மொழிந்த ப்ரபந்தசாரம்" என்று நூலினுள்ளும் நுழைந்திருப்பது மிகவும் அருவருக்கத் தக்க தன்றோ. எந்த ப்ரபந்தத்தின் எந்த விதமான ஸாரம் இதில் எந்த பாட்டில் பொறித்திருப்ப தென்று கேட்டாலோ வர்ஷசத மானாலும் விடையிறுக்க முடியாது. ஸ்வாமி ரஹஸ்யத்ரய ஸாரமென்றும், ஸாரஸார மென்றும், த்ரமிடோப நிஷத்ஸார மென்றும் சில பிரபந்தங்கள் ஸாதித் திருக்கிறாரே, இவற்றில் ஏதேனும் கேள்வி பிறப்பதுண்டோ? ரஹஸ்யத்ரயத்தின் ஸாரப் பொருள்களைக் கொண்டது ரஹஸ்ய த்ரயஸாரம்; அந்த ஸார க்ரந்தத்தின் ஸாரம் கொண்டது ஸாரஸாரம். த்ரமி டோப நிஷத்தான திருவாய் மொழியின் ஸாரங்கொண்டது த்ரமிடோப நிஷத் ஸாரம்; திவ்யப்ரபந்தார்த்த விசாரலேசமுமற்ற சுவடிக்கு ப்ரபந்தசாரமென்று ஒருகாலும் ஸ்வாமி பெயரிட மாட்டாரென்றால் இதை மறுக்க ஐயோ! நீரா அதிகாரி? திருச்சந்தவிருத்தத்தில் 126பாட்டு என்றெழுதிய நீரும் உம்முடைய அந்தகட்டுரைக்கு திருச்சந்த வருத்த ஸாரம் என்று பெயரிட்டிருக்கலாமா?

(தாதா.) பிரபந்தங்களின் ஸாரமான வகை தொகைகளை வெளியிட்டிருக்கும் நூலாகையாலே பிரபந்தசார மென்று பெயரிட்டிருக்கலாமென்று ஒரு அட்வகேட்

சொன்னர். அதை நானே கண்டித்து விட்டேன்; சாரீரகமீமாம் ஸையில் அத்யாய பாத ஸூத்ர அதிகரணங்களின் லக்ஷ்ணங்களையும் கர்த்தாவின் பெயரையும் ஒருபுத் தகம் சொல்லியிருந்தால் அதற்கு சாரீரகஸார மென்று பெயரிடலாமா? என்று கேட்டேன்; மணப்பாறைக்கு அப்பால் நெகிழ்ந்துவிட்டார்.

ஸஞ்சாரம் என்றொரு பதமுண்டன்றோ? அதில்(ஸம்) என்கிற உபஸர்க்கத்தைத் தள்ளிவிட்டால் சாரமென்றாகுமன்றோ. ஆக, ப்ரபந்த சாரமென்றது ப்ரபந்த ஸஞ்சாரமென்றபடியாய் ப்ரபந்தங்களிலே ஸஞ்சரிப்பது என்றதாகுமன்றோ? ப்ரபந் தங்களில்ஸஞ்சரித்துதானே வகை தொகைகளை சொல்லுகிறார் தேசிகன். ப்ரபந் தங்களில்ஸஞ்சாரம் பண்ணாமல் அந்த நூலை எப்படியெழுத முடியும்? ஆகவே பிர பந்த சாரமென்கிற பெயர் பொருந்துவதற்கு என்ன தடை?

(பந்:) அடடடட! என்ன தடையிருக்கிறது. இதைச் சொல்லும் போது உம் முடைய முக ஸேவையைக் காண பதினாயிரம் கண் வேணுமே! அது கிடக்கட்டும் இதைக் கேளும். இச் சுவடியில் முதற் பாட்டில் "ஆழ்வார்களவதரித்த நாளூர் திங்கள் என்றது உமக்குத் தெரியுமே [நாள் ஊர் திங்கள்] நாளென்பது நக்ஷத்திரம்; ஊரென்பது தெரிந்ததே. திங்களென்பது மாஸம். ஊரை முன்னேயோ பின்னே யோ எங்கும் வைக்கலாம்; மாஸ நக்ஷத்ரங்களை இடம் மாற்றுவாருண்டா? இன்ன மாஸத்தில் இன்ன நக்ஷத்திரத்தில் என்பது தானே அடைவு. "ஆழ்வார்களவதரித்த ஊர் திங்கள் நாள்" என்றோ "திங்கள் நாளூர்" என்றோசொல்லுவதில் யாப்புச்சிதைவு எள்ளளவுமில்லை அப்படியிருக்க, அடைவு தெரியாதவொருவன் இயற்றி தேசிகர் தலைமேல் ஏற்றினானென்பது ஸ்பஷ்டமாகத் தெரியவில்லையா?

(நாநா) அவசரப்படவேண்டா; இதைக் கேளும். என் தகப்பனார் பெரிய பண்டிதர்; ப்ரசன்ன பண்டிதர். ஒருவர் வந்து விவரஞ்சொல்லி சரமச்லோகம் செய்து கொடுக்கச் சொன்னார்; உடனே

"சுக்லபக்ஷே சுக்ரவாரே ஜயவர்ஷே ச ரேவதீ,
நக்ஷத்ரே மிதுநேஷ்டம்யாம் தொம்மனர்யோ திவம் கத:"

என்று அதே க்ஷணத்தில் ஆசுகவியாய் எழுதிக் கொடுத்தாச்சுது. வேறொரு பண்டி தர் வந்து இதைக் கேட்டு "ஜயாப்தே மிதுநே மாஸி சுக்லாஷ்டம்யாம் ப்ருகோர் திநே, ரேவத்யாஹ்வயநக்ஷத்ரே தொம்மனர்யோ திவம் கத:" என்று சுலோக மியற்றினால் அடைவு கெடாதிருக்குமென்றார். அப்போது அப்பா ஸாச்சாச்சுது (அதாவது)—அப்படியும் பண்ணலாம்; ஆனால் நான் செய்ததில் சுவையதிகம்; என்ன வென்று கேளும். சரமச்லோகங்களில் திதிமுக்கியம். ஒரே திதியானது இரண்டுபக்ஷத் திலும் வருகிறபடியால் சில பேர்கள் பக்ஷம் நினைவில்லாமல் சுக்லபக்ஷச்ராத்தத்தை க்ருஷ்ணபக்ஷத்திலும், க்ருஷ்ணபக்ஷச்ராத்தத்தை சுக்லபக்ஷத்திலும் மாறுடிச்செய்து விடுவதுண்டு; அதற்காக சுலோகம் தொடங்கும் போதே சுக்லபக்ஷே என்றது ஸந் தேஹ நிவாரகம். அதற்கு மேல் (சுக்லபக்ஷேசுக்ரவாரே) என்றது ப்ராஸத்தின் அழகை நோக்கி. எப்படியும் வர்ஷத்தைச் சொல்லியாக வேண்டியிருப்பதால் அடுத்த படி (ஜயவர்ஷே) என்றது பொருத்தம். அதன் பிறகு சகாரம் *சவைதுஹி சவை துஹி சாஸ்த்ரபரிபாலனர்த்தம். அதற்குமேல் நக்ஷத்ரம். அச்விநியாரம்பித்து ரேவதி

யோடு நக்ஷத்ரம் முடிந்துவிட்ட படியால் இங்கு (ரேவதீ) என்பதோடு பாதம் முடிக்கப்பட்டது. இப்படியிப்படி ஸ்வாரஸ்யமான விஷயங்களை ஸாதிச்சாச்சு. அடடா, இந்த ரஸங்கள் எனக்குத் தெரியாமல் போச்சுதேயென்று வருத்தப் பட்டுக்கொண்டே போனார். இவ்வாறு ஏதோ சில ரஸவிசேஷங்களைக் கருதியே தேசிகர் (நாளுர் திங்கள்) என்று ஸாதித்திருப்பர்; அந்த ரஸம் நமக்குத் தெரியாததனுலேயே தூஷித்து விடுவது நலமன்று. நானும் ஸாரமாக எழுதியிருக்கிறேனே, பார்க்கவில்லையோ? தேசிகன் தனது கவிதார்க்கிகஸிம்ஹத்வத்தையும் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரத்வத்தையும் இந்த ப்ரபந்த ஸாரத்தில் ஒவ்வொரு பாட்டிலும் ஒவ்வோரடியிலும் ஒவ்வோரெழுத்திலும் காட்டியிருக்கிறரென்று.

(பத்ம.) அமுதனுர் செய்த ராமாநுச நூற்றந்தாதியை ராமாநுசரே செய்ததாக எழுதிவைத்திருக்கிறதே, இதற்கு என்ன ரஸம் சொல்லப்போகிறீர்? ஏதாவது சொல்லப்போகிறீரா? ஆச்சரியமான ரஸமிருக்கக்கூடுமென்று அநுமானமோ சோதிடமோ சொல்லப்போகிறீரா?

(தாதா) இதில் தான் ரஸமதிகம். முராரிநாடகம், பட்டிகாவ்யம் என்றால் முராரி செய்தநாடகம், பட்டி செய்த காவியம் என்றுதானே அர்த்தம் அப்படியே இராமாநுசநூற்றந்தாதி யென்பதற்கும் ராமாநுஜர் செய்த நூற்றந்தாதி என்றல்லது வேறு பொருள் எப்படி பொருந்தும்? நூற்றந்தாதி முடிவில் "இன்றவன் வந்திருப்பிடம் என்றனிதயத்துள்ளே" என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருப்பதால் ராமாநுசர் அமுதனுருடைய இதயத்துள்ளே புகுந்து செய்தாரென்பது ஸ்பஷ்டமாயிற்று. இவர் அவருள்ளே புகாவிட்டால் ஒரு எழுத்தாவது பேசமுடியுமா அவரால்? ஓலையு மெழுத்தாணியும் போலே நின்றாரவர் ராமாநுஜரே இயற்றினவர்; ஆதலால் நூற்றந்தாதியை ராமாநுஜரே இயற்றியதாக ப்ரபந்த சாரத்தில்சொன்னது ரொம்ப ரைட்டு. இதெல்லாம் பெடரல் கோர்ட்டுதீர்ப்பாக என்றைக்கோ முடிந்துபோன விஷயமாச்சே.

ஸாரமாக ஒன்று சொல்லுகிறேன் கேளும். பிரபந்தசாரம் என்று ஒன்று இருப்பதை யாரும் மறைக்கமுடியாது. அது யார் செய்ததாகவாவது இருக்கட்டும். நாலுபேர் எட்டுபேர் சந்தை சொல்லி நெட்டுருப் போட்டு கத்தத் தொடங்கியாய் விட்டது. இனி இது நிற்கப் போகிறதென்று உமக்குக் கனவா? பிணங்கப் பிணங்கப் பிரபலப்படுமே யொழிய குறையாது. தேசிகப்பிரபந்தங்களென்று வழங்கப்படுகிற மற்ற பிரபந்தங்களின் முடிவு பாட்டில் தேசிகப் பெயர் இல்லையாயிருக்க இதில்மட்டும் (வேதாந்த குரு மொழிந்த ப்ர பந்த சாரம்) என்றிருப்பது கண்டு தெளிய கில்லாமல் வீணுக இதில் போராடுகிற பைத்தியக்காரரே! வேறு விஷயம் எடும். இந்த ப்ரபந்த சாரத்தைச் செய்தவர் வேதாந்த தேசிகராகத் தானிருக்க வேண்டும். இல்லையா, சொக்கலிங்க தேசிகராகவாவது இருக்க வேண்டும். கி. பி 1884ல் கடமங்கலம் வீராச்சியின் கோரிக்கைப்படி தாண்டவராயமுதலியார் பண்ணிக்கொடுத்ததென்று முடிச்சூர்அப்பாவு முதலியெழுதியிருப்பது சரியல்ல. 1881 வது வருடத்திலேயே இதை விளக்கடி கோவிலில் சொல்ல ஆரம்பித்தார்களென்றும் அதற்காக கலஹமும் கம்ப்ளேண்டும் ஏற்பட்டு அபராதமும் விதிக்கப்பட்டதென்றும் ரிகார்டுகள் காட்டி வருவது சரிப்

படாது. 1884ல் இது செய்யப்பட்டிருந்நால் 1881ல் எப்படி கலஹமும் தண்டனையும் ஏற்பட்டிருக்க முடியும்? ரிகார்டுகளுக்கு விரோதமாகச் சொல்லக்கூடுமா?

(பத்ம) இதெல்லாம் கடக்கட்டும்; அந்த பேர்வழிக்கு எங்கேயோ பாதுகாஸஹஸ்ர பஹுமானம் கிடைத்ததாகச் சொல்லுகிறீர்களே, அது எவ்விடத்தில்? எப்போது? எதற்காக? கொஞ்சம் ஸாதித்தருளலாமா?

> இதைக் கேட்டவுடனே அவர் நம்முடைய தோழரான கேசவாசாரியரைப் பார்த்து "இவருடைய கேள்விகளுக்கு தேவரீர் பதில் ஸாதிக்க வேண்டியது; எனக்கு மார்வலியாயிருப்பதால் சிறிது விச்ராந்தி கொள்ளுகிறேன்" னென்றார். அரை மணி காலம் கேசவாசாரியரோடு ஸம்வாதம் நிகழ்ந்தது.

(கேசவாசார்) ஸ்வாமிந்! பத்மநாபரே! அதைப்பற்றி நான் சொல்லுகிறேன் கேளும். இந்த அந்தாசார் திருமழிசை யாழ்வாரைப்பற்றி ஸம்ஸ்கிருதத்தில் எழுதின வியாஸத்தில் திருச்சந்த விருத்தம் 126 நூற்றிருபத்தாறு பாட்டு கொண்டது என்றெழுதியருளினரென்பது தேவரீருக்குத் தெரிந்தது தானே; அதைப் பற்றி ஒரு அத்யாபகஸ்வாமி கேட்டதற்கு இவர் தனியன்களைச் சேர்த்துக் கொண்டதோடுகூட உபதேசரத்தினமாலைப் பாசுரங்களையும் சேர்த்துக் கொண்டு 126 பாட்டென்பதை தாழாதே சார்ங்கமுதைத்த சரமழைபோல் வர்ஷித்து ஸமர்த்தித்து விட்டாரல்லவா? அப்போது ஈகையப்பன் வந்து "ப்ரபந்தசாரப் பாட்டுமிருக்கிறதே, அதை ஏன் கூட்டிக் கொள்ளவில்லை? என்று கேட்டான், அதற்கு இவர் விநயமாக ஏதோ விடை கூறியிருக்கலாம்; மறந்து விட்டேன் ஸ்வாமீ! என்று எளிதாகச் சொல்லியிருக்கலாம்; அதை விட்டு, "அடபோடா உனக்கென்னடா தெரியும்? ஏதோ மாரடிக்க நேற்று காலே கல்பித்த ப்ரபந்த சாரத்தையும் பிள்ளையந்தாதியையும் விவேகிகள் பார்த்தால் வாயால் சிரிக்க மாட்டார்கள். ஏதோ நம்மடவர்களின் அழுகைக்கு நாம் விட்டுக் கொடுக்கக் கூடாதென்று நானும் மாரடிக்கிறேன். இவ்வளவே தவிர, ப்ரபந்தசாரத்தை புராதனமென்று பேதையனும் பேசமாட்டானே; அதையா நான் உதாஹரிப்பது!" என்று தடதடவென்று கண் பிதுங்கப் பேசி விட்டார். இதை ஏகாந்தமாகச் சொல்லியிருந்தாலும் பரவாயில்லை பல பேரெதிரில் சொன்ன படியாலே ஒவ்வொருவரும் பாதுகாஸஹஸ்ரபகுமானம் பண்ணினார்கள்.

(பத்ம) ஸஹஸ்ரமில்லாவிட்டாலும் சதமாவது இருக்குமோ? அவ்வளவு தாங்கமுடியாதே. அதிசயோக்தியென்று நினைக்கிறேன்

(கேசவர்) இல்லையில்லை. அதிசயோக்தியில்லை. ஸஹஸ்ரத்துக்கு மேலுமிருக்கும்; ஸாத்மிக்க ஸாத்மிக்க ஸமர்ப்பிக்கிறபடியாலே ஸஹ்யமாகிறது. இத்தோடு மட்டும் விடவில்லை. அந்த ஈகையப்பனைப்பற்றி இவர் வாசாமகோசரமான வசவுகளைப் பொறித்து விட்டார். (அதாவது) "இந்த ஸ்ருகாலம் ஒரு மனுஷ்யனா? அல்லது ஹ்ருதயமில்லாத வொரு ப்ராணியந்த்ரமா என்பது விஜ்ஞானிகள் கண்டறிய வேண்டிய ப்ரதான விஷயம்" என்றும், "இத்தனை பாபிஷ்டமான இந்த ஜந்து ஸ்ரீவைஷ்ணவ னென்ற பெயருடன் இருந்து வருவது ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்திற்கே

ஒரு களங்கம். மஹத்தான ஒரு தௌர்ப்பாக்யம்" என்றும் இப்படி இன்னும் எண்ணிலாதபடி தான் தன்னாசாரியரிடத்தில் ஒதின திவ்ய ஸூக்திகளையெல்லாம் பெய்துவைதது இந்தஜந்து. இதற்காகவும் ஒரு பாதுகாஸஹஸ்ர பஹுமானம் ப்ராப்தமாயிற்று. இதெல்லாம் எப்போது? எங்கே? என்று கேட்கிறீர்; திருவடி *ஸ ஏஷ தேச: காலச்ச*என்றுப்போலே இதுக்கு தேசகால நியமமில்லையே? கண்ட போதிலும் கண்டவிடங்களிலும் அத்யாபி நடந்து கொண்டுதானே யிருக்கிறது; (சென்றவிடமெல்லாம் செருப்பு) என்றுமொரு பாடமுண்டே. அந்த பாடம் இதற்காகவே தோன்றியிருக்கவேண்டும.

மூர்க்கமகரம் உள்ளேயெழுந்து போய்விட்டது வரவில்லை;
கேசவாசாரியர் ஸாதிக்கிறார்.

அம்ஞபட்டை, அக்காளிப்பிச்சம் அண்ணுளம், அஸந்தர்ப்பக்குடுக்கை .... என்று பல பிருதுகள் பெற்றவிது வாயைத் திறந்தால் ஊத்தைநாந்தமொழிய வேறில்லை. இதினுடைய ஜ்ஞானமெல்லாம் வ்யதிகரணம். பிறரை மோசம் செய்கிறதென்பது கிடக்கட்டும். தான் மோசம் போகிறது அபாரம். திருச்சந்த விருத்தத்திற்கும் இதற்கும் எவ்வளவு தூரம்! எத்தனை காதம் தூரம். இது, தனக்குத் தெரியாமலா இருக்கிறது? விரலுக்குத்தகாத வீக்கமல்லவா இதற்கு; இதில் தெய்வமே யன்றோ மூக்கையறுத்து வைத்தது. இது திருப்பல்லாண்டு என்றும் பிரபந்தசாரமென்றும் தன் ஊத்தைவாயால் சொல்லுவதற்கும் வெட்கப்பட வேண்டும். மானியாயிருந்தால் தலை மறைந்து கிடந்தே தன்னுயுளைக் கழிக்க வேண்டும். இந்த ஒரு வேடிக்கையைப் பாருங்கள். திருவாய்மொழி முதற்பாட்டின் வியாக்கியானங்களில் "ஸ்வாபாவிகாநவதிகா திசயாஸங்க்யேய கல்யாணகுணகண:" என்று இதுக்காளவந்தாரருளிச் செய்யும் சந்தை" என்று அருளிச் செய்யப்பட்டுள்ளது. இந்த அபஸ்மாரகம்— பூர்வாசார்யக்ரந்தகந்தமுமறியாத யதாஜாதம் ஒரிழவுமறியாதே ஆளவந்தாருடைய திருவாக்கு அப்படி கிடையவே கிடையாது என்று பிதற்றிற்று. உலகமெல்லாம் போற்றும் மஹாஜ்ஞானநிதியாய் ஷஷ்டிப்ரபந்த நிர்மாதாவென்று ப்ரஸித்தராய் உபநிஷத்பாஷ்யகாரரான ரங்கராமாநுஜஸ்வாமி தம்முடைய ஸம்ஸ்கிருத வியாக்யானத்தில் (அதேயிடத்தில்) "இமமேவார்த்தம அபிஸந்தாய பகவத்யாமுநமுநிபி: ஸ்வாபாவிகாநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாணகுணகண இதி ப்ரதமபாதார்த்த இதி உக்தம்" என்றெழுதி வைத்திருப்பதை யெடுத்துக் காட்டியபின்பு "அவர் அல்பஜ்ஞர்; தென்கலையாசாரியர்களை தூஷிக்கும் வழியே அவர்க்குத் தெரியாது; அந்த ஆசாரியர்களின் திருவடிகளே தஞ்சமென்றிருப்பவரல்லவா அவர்-என்று தலைகால் தெரியாத செருக்குடன் குதிக்கிறது. உலகத்தில் "ஐந்தில் இரண்டு பழுதில்லை" என்று வசனமுண்டு. இந்த அபப்ரம்சபுஞ்சத்தின் வாக்கில் பழுதல்லாதது ஒன்றுமே கிடையாது; வயிற்றெரிச்சல் தீர வைது தீர்ப்பதென்று ஸங்கல்பம் செய்து கொண்டு

உற்ருருறவினருட்பட சிரிக்கும்படியாயிருப்பதை தான் நன்ருகத் தெரிந்து கொண்டிருந்தும் சில அஜாகளஸ்தனங்களிடத்திலே அசட்டுச்சிரிப்புடன் உலாவி வருகிறது. அந்தோ! இதை ஒரு பொருளாகவெண்ணி இத்தோடே பேசவருவதும், இது கொடுக்கும் நிந்தைக்கந்தைகளை வாங்கிப் போய் வாசிப்பதும் எனக்கு அடியோடு பிடிக்கவில்லை. பொறுமையுடன் ஒரு விஷயத்தையாவது இது க்ரஹிப்பதுண்டா? க்ரஹிக்க மூளைதானுண்டா? ஒரு ஊருக்கு ராமாயணம் சொல்லுகிறேனென்று புறப்பட்டுப் போச்சுது; இதுக்கு ராமாயணச்லோகம் தெரிவதற்கு என்னப்ரமேயம். (கூஜந்தம் ராமராமேதி) கூட தெரியாது. ரகுவம்சத்தில் ராமாயண கதையும் வருகிறதல்லவா? அதை வைத்துக் கொண்டு எதெதையோ காடு பாய்ந்து பேச ஆரம்பித்தது; வந்த நாலு பேரும் சொல்லாமலே எழுந்து போனார்கள். காவ்யரஸம் தெரியாத முண்டங்கள் இதுகள் என்று சொல்லித் தானும் சொல்லாமலே கிளம்பிப் போச்சுது. இது பட்ட பரிபவங்கள் பாரதராமாயணமென்னத்தடையில்லை. இதைப் பற்றிக் காஞ்சிஸ்வாமியின் நூல்கள் மட்டும் வடமொழி தென்மொழிகளில் முப்பத்திரண்டு என்று உலகப்பிரசித்தமல்லவா? நாளாய் விட்டபடியால் அதெல்லாம் மறந்து போயிருக்குமென்று நினைக்கிறது பாவம்! பண்டிதர்களும் மறக்க மாட்டார்கள், பாமரர்களும் மறக்கமாட்டார்கள் இதுவும் மறக்கமாட்டாது. இத்தோடே நீங்கள் விஷயவிசாரம் நடத்துவது எனக்குப் பிடிக்கவில்லை. ஆனல், இந்த ஸம்பாஷணையிலிருந்து இங்குள்ளவர்களுக்குப் பல விஷயங்கள் தெரிவதால் நடக்கட்டும். வேடிக்கை பார்க்கிருேம்-என்று சொல்லி விட்டுப் போனர்.

போனவர் கோவிந்தாசாரியரை அழைத்துக்கொண்டு உடனே திரும்பி வந்து அந்த ஸ்வாமியை ஒரு உபந்யாஸம் செய்யச் சொன்னர். அவர் செய்த உபந்யாஸத்தின் ஸாரமாவது—இந்த அஸந்தர்ப்பக் குடுக்கை துர்க்கந்த குஸாமத்தில் துராக்ரஹமே தூண்டவும் தன் வயிற்றெறிச்சல் தீரவும் அநுவாதத்திற்கும் தகாத பல பல வார்த்தைகளைக் கொட்டியிருக்கிறது. அந்த துர்க்கந்தச் சுவடி ஒன்பது வருஷம் ஜீவித்திருந்ததாகக் காட்டுவதற்கு 1951 வருடத்தில் அச்சிட்டதாக மேலே போட்டு விட்டது. அப்படியே உண்மையானலும் விநமாள வேண்டிய காலம் ஸமீபித்து விட்டபடியால் இப்போது தலைகாட்டத் தொடங்கியிருக்கிறது விதி மாண்டு விட்டதென்றே நிச்சயிக்கலாம். ஜட்கா வண்டிக்கார பாஷை. யென்று ஒன்றுண்டு; அந்த பாஷை தவிர இதுக்கு வேறு பாஷை தெர்யாததலால் அதையே பக்கந்தோறும் நிரம்பியுள்ளது. சிலவற்றை யெடுத்துரைக்கிறேன் கேளீர்.

பக்கம் 126 ல "ஒன்று கூற முயலும் இந்த குடிலமதி; அதற்குப்: பலஞன ப்ரஹாரங்களையும் பெற்றுக் கொள்ளும்" என்றெழுதுகிறது. தானே நேராகவோ, தனக்கு அடிமை செய்யும் ஆள்களையிட்டோ ப்ரஹாரம் செய்து வெற்றிபெறப் பார்க்கிறது இந்த துர்ஜந்து. இதுக்குக் கைகண்ட உபாயம் இது தானே.

பூருவாசாரியர்களில் நம்பிள்ளை தொடங்கியே மேலுள்ள ஆசாரியர்களுக்கு ஸம்ஸ்க்ருதஜ்ஞானமே கிடையாதென்றும் ஸ்ரீபாஷ்ய பரிசயம் ஸுதராம் கிடையாதென்றும் தேசிகருக்கு ஸர்வதோ முகமான ஜ்ஞானமிருந்ததென்றும் கைபோனபடியெல்லாம் எழுதியிருக்கிறது. D. R. என்கிற திண்டுக்கல்லையங்கார் மதுராந்தகர் போல்வார் இப்படியெழுதி எதிர்வகுப்பிலுள்ள ஸம்ஸ்க்ருதஜ்ஞான ஸ்ரீபாஷ்யஜ்ஞானச்சாய வெள்ளங்கள் பெருக்காறெடுத்து ப்ரவஹித்துக் கொண்டிருக்கிறது அந்த வெள்ளங்கள் இடையிடையே வற்றிப்போகாதபடி ப்ரவாஹ அபிவிருத்தியைச் செய்து போர இந்த அஸூயா ஸிண்டம் மிகமிகப் பாடுபடுகிறது. இதன் மனோரதம் எதுவும் பழுதுபடாது. ஒன்று நூறுயிரமாகவே பலிக்கும்; பலித்தும் வருகின்றது. த்விதீயப்ரஹ்மதந்த்ரஸ்வாமி யருளிச்செய்த தேசிக சரித்திரம் பலபாஷைகளிலும் மொழி பெயர்ந்து உலகம்பரவியுள்ளது. அதுவே போதுமே.

பெரியவாச்சான் பிள்ளைக்கும் தேசிகருக்குமுள்ள தொடர்பை இன்னமும் குன்றிலிட்ட விளக்காக ஆக்கிக் கொள்ள மிகவும் பாடுபட்டிருக்கிறது. இதனுடைய மநோரததாநாம் அதடா: ப்ரவாஹா: எல்லாம் விரைவில் பலிக்கும்.

உபதேசரத்தினமாலையில் ரஹஸ்யத்ரயசாரத்தைப்பற்றி ஒன்றும் சொல்லாமல் ஸ்ரீவசனபூஷணத்தை மட்டும் புகழ்ந்தெழுதியிருக்கிறதென்று பொருமைப்பட்டு நிந்திக்கிறது "முன்னோர் மொழிந்த முறைதப்பாமல் .. மூர்க்கராவார்" என்று ரஹஸ்யத்ரயசாரப் ரசம்ஸை யென்பதை தெரிந்து கொள்ளவில்லை பாவம்!

இந்த அஸமஞ்ஜஸம் லஜ்ஜையும் மானமு மற்று எழுதுகிறது— தேசிகர் எப்படிப்பட்ட பண்டிதர், அவருடைய நூல்கள் எப்படிப்பட்டவை; அவரையும் அவருடைய நூல்களையும் கொண்டாடுகிற அந்தபரம்பரையில் சேர்ந்தவர்கள் எப்படிப்பட்டவர்கள்! என்கிறது. உண்மையில் இதெல்லாம் உண்மையே. இதைச் சொல்லுகிறவர்களும் எழுதுகிறவர்களும் எப்படிப்பட்டவர்களாயிருக்க வேண்டுமென்பது இந்த ஜால்மத்துக்குத் தெரியவில்லையே (ஜால்ம: அஸமீக்ஷ்யகாரீ ஸ்யாத்) பல காரணங்களினால் தேசிகஸூக்தி அஸமஞ்ஜஸமென்று கூசாமல் எழுதி வைத்த இந்த அஸமஞ்ஜஸத்திற்கும் இந்த வார்த்தைகளுக்கும் எவ்வளவு தூரமென்பது இதற்குத் தெரியவில்லையே. திருவல்லிக்கேணி திருக்கடல் மல்லைக்கோ சென்று அநுதாபத்தோடு ஆயிரத்தெட்டுக்ருச்ச்ரங்கள பண்ணிக்கொண்டு நிஷ்க்ருதி செய்து கொண்டு வரட்டும், பிறகு பேசட்டும் எழுதட்டும்.

இரண்டுகாலுமில்லாத ஒரு முடவனுக்கு சொக்காயும் நிஜாரும் அணிவித்து கையில் தடியும் கொடுத்து மாந்தோப்புக்கு காவல் வைத்திருந்தார்கள். மாம்பழம் பறிக்க வருபவர்களை நோக்கி 'இதோ எழுந்து வந்து அடிக்கிறேன் பார்' என்று அதட்டுவனும். தாராளமாக எழுந்துவாடாப்பா என்று சொல்லிக் கொண்டே மாம்பழம் பறித்துண்பர்களாம். அவனைப்போன்ற இவனை ஏவி ஸம்ப்ரதாய ரக்ஷணம் பண்ணப்பார்க்கிற அசடுகளை என்ன சொல்லுவது! எங்கேபோயழுவது!

இரண்டாவது ஆன்னிகம் முற்றிற்று.

—

## — மூன்ருவது ஆன்ஹிகம் —

# தத: ப்ரவிசதி திருமலதாதாசார்ய:—

### கேசவாசார்யருக்கும் திருமலதாதாசாரியருக்கும் ஸம்பாஷணே.

(கேசவர்.) பத்மநாபாசார் இன்று பத்து புத்தகங்கள் கொணர்ந்திருக்கிருர். இவையெல்லாம் உம்முடைய ப்ரலபிதங்களுக்கு ப்ரத்யக்ஷகண்டனமென்று தெரியவருகிறது. ஒவ்வொன்ருக எடுத்து விமர்சிப்போம். ஸர்வ சக்தியென்ரெரு புத்தகம் நீர் எழுதினதாகச் சொன்னீர்; அது தோன்றின மறுநாளே அத்புத சக்தியென்னும் நூலைக் காஞ்சீஸ்வாமி வெளியிட்டு அதைக் கண்டித்தாய் விட்டதென்றும் சொன்னீர்; மாம்பலத்திலெழுந்தருளியிருந்த மஹர்ஷி வாஸுதேவாசார்யஸ்வாமியைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீரோ?

(திருமல) என்ன அப்படி கேட்கிறீரே? அவரோடு எனக்கு நல்ல பரிசயமுமுண்டே. ந்ருஸிம்ஹப்ரியாபத்ரிகை ஆரம்பித்தபோது அவரே தான் ஸம்பாதகராக இருந்தார். அவர் சிறந்த விவேகி. தத்துவ ஞானிகளில் அவர் தலைவர். அவர் எழுதியிருப்பதெல்லாம் வித்வான்கள் உச்சிமேல் வைத்து மெச்சத்தக்கவையென்பது ப்ரஸித்தமாச்சே. அவரைப்பற்றி இப்போது என்ன?

(கேசவர்) ஸர்வஜித் ஹூ (1948) மாசி மாதத்தில் அந்த மஹர்ஷி வாஸுதேவாசார்யஸ்வாமி தாம் வெளியிட்ட ந்ருஸிம்ஹப்ரியாவில் காஞ்சீஸ்வாமியின் அத்புத சக்தி நூலைப்பற்றி மதிப்புரை வெளியிட்டிருக்கிருர்; அதை ஏற்கெனவே நீர் பார்த்திருப்பீர். அதை இதோ உமது கையில் தருகிறேன். அதை இந்த ஸதஸ்யர்கள் திருச்செவி சாத்தும்படி நீரே உரக்க வாசிக்கவேணுமென்று இங்குள்ளார் விரும்புகிருர்கள். வெட்கப்படாமல் வாசிக்கவேணும்.

[திருமலதாதாசாரியார் ந்ருஸிம்ஹப்ரியா 7-2 ஸஞ்சிகையை வாசிக்கிருர்]

"அத்புத சக்தி:— இதனை இயற்றியவர் ப்ரதிவாதி பயங்கரம் வித்வான் ஸ்ரீ உ.ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி; விஷயம்:- எம்பெருமான் எங்கும் நிறைந்துள்ள பரம்ஜ்யோதிஸ் என்று வேதங்கள் கூறுகின்றன. அதாவது: மஹத்தான பதார்த்தங்களின் வெளியிலும் அணுவான பதார்த்தங்களினுள்ளும் அவன் நிறைந்துளன் என்று சொல்லப்பட்டதாயிற்று. இது எப்படி ஸாத்யம்? அணுவான பதார்த்தங்களுக்கு உட்புறம் என்று வகுத்துக்காட்டக்கூடிய இடம் இல்லையே. அங்கு அந்தர்வ்யாப்தி எப்படி? அம்மாதிரியே மஹத்தான பதார்த்தங்களில் பஹிர்வ்யாப்தி எனறு சொல்வது ஸாத்தியமில்லையன்ருே! ஆகையால் வேதாந்திகளின் கொள்கையை ஒப்புக்கொள்ள இயலாது. இவ்வாறு ஆட்சேபமொன்று உண்டு. நிற்க: பகவானுடைய ஸ்வரூபம் முழுவதும் ஒரு பதார்த்தத்தில் வ்யாபித்திருக்கிறதென்று சொல்லிவிட்டால், மற்றும் உலகிலுள்ள வஸ்துக்களிலும் இது இருக்கிறதென்று எப்படிச் சொல்லக்கூடும்? இது மற்றுமொரு ஆக்ஷேபம். இம்மாதிரியான

ஆக்ஷேபங்களுக்கு எம்பெருமானுக்கு அத்புதமான சக்தி உண்டாகையால் இவை பரஸ்பர விருத்தமாக இருந்தாலும், அவன் விஷயத்தில் அது இயலும்' என்று ஸமாதாநத்தை சாஸ்த்ரங்களே கூறுகின்றன. இந்த அத்புத சக்தி என்பதன் பொருள் என்னவென்னும் விஷயத்தில் வைஷ்ணவர்களுக்குள் விவாதமுண்டு. அப்படி விவாதிக்கும் இரு கக்ஷிக்காரர்களுள் எவர்களுடைய கக்ஷி இருகக்ஷிக்காரர்களுக்கும் பொதுவாக இருக்கும் ஆசார்யர்களுக்கு அபிமதம் என்பதை இந்நூல் விசாரிக்கின்றது, இதை மிக்க ரஸத்துடன் ஸ்ரீஅண்ணங்கராசார்ய ஸ்வாமி விசாரித்திருக்கிருர். ரஸிகர்கள் இதைப் படித்து ஆநந்தப்படக்கூடும். இதன் விலை அணு எட்டு. இதனை 'ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமி சின்ன காஞ்சீபுரம்' என்னும் விலாஸத்துக்கு எழுதிப்பெற்றுக்கொள்ளலாம். ஸ்ரீ. ங்கு. ப்ரியாஸம் பாதகர். என்று வெளிவந்துள்ளது என்று வாசித்து முடித்துவிட்டார் தாதாசார்.

(கேசவாசார்) நான் வாசிக்கச் சொனனேன், நீர் உடனேயெழுந்து ராகம் போட்டு வாசித்துவிட்டீர். பட்டர் ஸ்ரீரங்க நாச்சியாரை நோக்கி (த்வம் லஜ்ஜஸே) என்ருர்; அது உம்முடைய ஜில்லாவிலேயே கிடையாதுபோலும். இப்போது நீர் வாசித்த மதிப்புரையில் "இம்மாதிரியான ஆக்ஷேபங்களுக்கு 'எம்பெருமானுக்கு அற்புதமான சக்தி யுண்டாகையால் இவை பரஸ்பரவிருத்தமாக இருந்தாலும் அவன் விஷயத்தில் அது இயலுமென்று ஸமாதானத்தை சாஸ்த்ரங்களே கூறுகின்றன' என்றுள்ள வாக்கியம் மிகவும் ஸாரமானதென்பதை அறிந்திருக்கிறீரா?

(திருமல) அவ்வளவு கூட அறியாத மூடமா நான்! நன்கறிந்திருக்கிறேன். அறிந்தபடியால் தான் மேலே ஒன்றுமெழுதப்புகாமல் கையொழிந்து நின்றேன்; வாய்க்கும் கைகளுக்கும் ஸப்ஸலாக்கு பூட்டு போட்டான பிறகு நான் என்ன செய்ய முடியும்? மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமியின் திருவுள்ளமென்ருல் அதற்கு விண்ணெல்லாமுண்டோவிலே? என்னவேணுமே தவிர வேறு பேச்சுண்டோ? காஞ்சீ ஸ்வாமியின் அத்புத சக்தி யென்னும் நூல் உண்மையில் அத்புதமானதே. இதில் ஸாரமாக இரண்டு விஷயங்கள் தெரிவிக்கிறேன். எம்பெருமானுடைய வ்யாப்நிவிசாரத்தில் பரிஸமாப்யவர்த்தித்வப்ரஸங்கத்தில் நம்பிள்ளையீட்டில் "ஜாதி வ்யக்திதோறும் பரிஸமாப்யவர்த்திக்குமா போலே" என்று த்ருஷ்டாந்தம் காட்டியிருப்பதை யெடுத்துக் காட்டியிருந்தார் P. B. A. அதற்குமேல் நடந்த விவாதத்தில் "நாம் ஜாதியை ஒப்புக்கொள்ளாதவர்களாகையாலே ஜாதியை த்ருஷ்டாந்தீகரிப்பது தகுதியற்றது" என்றெழுதலாயிற்று. அதற்குமேல் P. B. A. அடுத்த க்ஷணத்திலேயே ஸ்ரீபாஷ்யகாரருடைய வேதாந்ததீப ஸூக்தியை எடுத்துக்காட்டினர்; (அதாவது) 'யதா ஜாதிவாதிநோ ஜாதிரேகைவ அமூர்த்த அகண்ட முண்டாதிஷு அத்யந்தவிலக்ஷணேஷு அநந்தேஷ்வபி பரிஸமாப்யைவ வர்த்ததே. ந தத்ர இதரவஸ்து சோத்யமிதி" என்று கண்ணுடி போன்ற திவ்யஸூக்தி. இதை யெடுத்துக்காட்டின பிறகு, நான் ஏற்கெனவே இதை அறிந்தவன் போலப் பாவனை செய்து எனது ஸர்வ சக்திச்சுவடியில் (பக்கம் 14ல்) இந்த ஸ்ரீ ஸூக்தியைப் பரம கம்பீரமாக உதாஹரித்து "பகவத் ராமநுஜன் தீபக்ரந்தத்தில் ஸ்பஷ்டமாக ஸாதித்தார்" என்றெழுதிவிட்டேன். இது நமக்கு

ப்ரதிகூலமென்று கூட உணராமைக்கு * வெள்கிப்போ யென்னுள்ளே நான் விலவறச்சிரித்திட்டேனே. ஆனாலும், நிர்லஜ்ஜதா பலவதீதி ந சித்ரமேதத்.

இதற்கு மேல் மற்ருென்றுங்கேளும். நான் ஜயந்த பட்டன் என்ற தலைப்பின் கீழ் எழுதியிருந்தேன்—''ஜாதியைப் பரிஸமாப்ய வர்த்தியென்கிறீரே; ஒரு வ்யக்தியிலேயே முடிந்து நிற்பதையன்ருே பரிஸமாப்ய வர்த்தியென்பது; மற்றும் பலபல வ்யக்திகளிலுமிருக்கிறவிதனை ஒரு வ்யக்தியில் பரிஸமாப்ய வர்த்தியாக எப்படிச் சொல்லுகிறீர்! என்று கேட்பவர்களுக்கு ஜயந்த பட்டாசார் என்ன மறுமொழி கூறியுள்ளார் தெரியுமோ? அவர் கூறியிருப்பதிவ்வளவே. 'என்னைக்கேட்டால் நானென்ன சொல்வது? பரிஸமாப்யவர்த்தி யென்று சொல்லித் தீர வேண்டியிருக்கிறது; அது மற்ற வ்யக்திகளிலும் காணப்படுகிறதே யென்கிருயோ, ஆமாம் காணப்படுகிறது. அதை இல்லை செய்ய யாரால் முடியும்? அதையும் இசையவேண்டியதே இதையும் இசையவேண்டியதே'' என்று. இது நமக்கு பாதகமேயொழிய ஸாதகமன்று என்பதைக்கூட சிறிது முணராமல் எழுதுகிற மேதாவி இவ்வுலகில் ஒருவனேயன்ருே. தேசிகனுடைய உக்தியில் பஹு அஸாமஞ்ஜஸ்யமிருப்பதாக எழுதவும் அதை ஸ்தாபிக்கவும் நாளுெருவனேயன்ருே அதிகாரி.

(கேசவாசார்) நீர் பரமரஸிகர்; இவ்வளவு ராஸிக்யம் உமக்குள்ளதென்று இதுவரையில் அறியேன். நாள் முழுவதும் ஊணுமுறக்கமும் மறந்து உம்மோடு பேசினாலும் சலிப்பில்லை. ஒரு யதாஜாதன் தன்னைப் பண்டிதனென்று பிரசுரப்படுத்திக்கொண்டிருந்தான். அவனை நோக்கி 'அப்பா! உன்னைப் பலரும் ஒன்றுமறியாத மூடனென்கிருர்களே; நீ பண்டிதனென்கிருயே. என்ன சங்கதி? என்று கேட்டார்களாம். 'ஆமாம்; உலகமெல்லாம் சொல்லி வருவதும் சரி; நான் சொல்லுவதும் சரி. இரண்டுக்கும் ஒரு விரோதமு மில்லையே' என்ருனும். இப்படியுள்ளது உம்முடைய வாக்யார்த்தம். ''மானமும் வெட்கமும் மானமேறிப்போய் விட்டால்....'' என்கிற செய்யுள் தான் நினைவுக்கு வருகிறது. நம்முடைய பேச்சு நிற்கட்டும். இதோ இருவர் பேசிக்கொண்டிருக்கிருர்கள்; இதைக்கொஞ்சம் கேட்போம். நீரும் வாரும். (என்று சொல்லி இருவரும் எழுந்து போய்க் கேட்கிருர்கள்.)

— மாதவாசாருக்கும் அஸமஞ்சஸக்குடுக்கைக்கும் ஸம்பாஷணை —

(மாதவாசார்) அஸமஞ்ஜஸக்குடுக்கையே! த்வீபாந்தரங்களிற் பிறந்தவர்கள் உபநிஷத்துக்களையும் ஸ்ரீ பாஷ்யத்தையும் மற்றும் வேதாந்த நூல்களையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிருர்கள்; அனேக விமர்சங்களையும் செய்திருக்கிருர்கள். அவற்றில் எவ்விதமான பிழையும் காணமுடியவில்லை யென்று நம்மவர்கள் ஆச்சரியப்படுகிருர்கள். அவர்களுடைய மேதையை மிகமிக மெச்சுகிருர்கள். நீ இந்தத்வீபத்திலேயே பிறந்தும் ஒரிழவுமறியாமல் ஒன்றிலும் ருஜுவான ஞானமின்றிக்கே வ்யதிகரணஜ்ஞான நிதியென்று ஸஜாதீயர்களோடு விஜாதீயர்களோடு வாசியற எல்லாரும் ஏச நின்று ஏதுக்கு இப்படி பரிபவப்படுகிருய்? பூர்வ மீமாம்ஸையும் உத்தரமீமாம்ஸையும் ஏக சாஸ்த்ரமே யொழிய தனித்தனி சாஸ்த்ரமன்றென்று வாத விவாதங்கள் மஹாப்ராஜ்ஞர்களிடையே நிகழ்வதுண்டு; விவாதப்படுகிறவர்கள் உண்மையில் சிறந்த படிப்பாளிகள். முறையே கேட்டவர்கள்.

அவர்களுக்கு விவாத யோக்யதையுண்டு. பல்லாண்டு கூட தெரியாத உனக்கு திருப்பல்லாண்டென்றும் திருநெடுந்தாண்டகமென்றும் வாயால் வ்யவஹரிக்கவும் யோக்யதை யில்லாதிருக்க, இதில் நீ புகுந்து வாதிப்பதும் உனக்குச்சிலர் விடை கூறவருவதும் விசித்திரமாகவன்ருே இருக்கிறது. அஜ்ஞானங்களில் ஸ்வாஜ்ஞான அஜ்ஞான மென்பதைத் தலையாகச் சொல்லுகிருர்கள். அதை உன்னிடத்தில் தான் காண்கிருேமப்பா! என்ன? நான் சொல்லுகிறது எப்படி?

(அஸமஞ்ஜஸம்) ஸ்வாஜ்ஞாநாஜ்ஞான மென்ருல் தன்னுடைய அஜ்ஞானத்தைத் தான் தெரிந்து கொள்ளாமை யென்றுதானே அர்த்தம், இதில் என்ன ஆச்சரியம்! தன்னை அஜ்ஞனென்று எவனுவது சொல்லிக்கொள்வனு? நினைக்கத்தான் நினைப்பனு? பெரியவொரு ஆசாரியர் "அஜ்ஞாநாம் அஹம் அக்ரணீ: அத ச மாம் மந்யே ப்ருசம் பண்டிதம" என்று சொல்லிக்கொண்டிருக்கிருரே. என்னுடைய அஜ்ஞானத்தை உலகமெல்லாம் தெரிந்து கொண்டிருப்பது வாஸ்தவம். நானெப்படி தெரிந்துகொள்ள முடியும்? உண்மையில் தெரிந்து கொள்ளாமலுமில்லை. அவரவர்கள் அலசியலசிக் காட்டும்போது எப்படியையா தெரிந்துகொள்ளாமலிருக்க முடியும்? விளக்கின் ஒளி நாற்புறமும் பரந்திருக்கிறது; ஆனுலும் அதன் கீழே இருள் தானே. பிறர் முதுகில் இருப்பதை நாம் பார்க்கிருேம்; நம் முதுகில் இருப்பதை நாம் பார்க்க முடிகிறதோ! (மாதவாசார்) அப்பா! வெகுஜோராகப் பேசுகிருயே. உனக்கு அஸமஞ்ஜஸக்குடுக்கையென்று யார் பெயர் வைத்தது? உன்னைப்போன்ற ஸமஞ்ஜஸவாதி உலகில் கிடையாதே.

(அஸமஞ்ஜஸம்) என்னை அஸமஞ்ஜஸக்குடுக்கையென்பவர்கள் நான் அஸமஞ்ஜஸமாகப் பேசுபவன் என்கிற கருத்தைக் கொண்டல்ல; ஆசார்ய ஸூக்திகளை அஸமஞ்ஜஸமென்று நிர்தாக்ஷிண்யமாகத் துணிந்தெழுதுபவன் நானெருவனேயென்கிற கருத்தினுலென்று தெரிந்துகொள்ளும். அது கிடக்கட்டும் இதோபாரும், பாரிஜாதபுஷ்பத்தின் அட்டையில்—"நம்பிக்கைத்ரோஹம் செய்து வண்ணமாடங்கள் முதலான பெரியாழ்வார் திருமொழிக்குத் தானே வஞ்சனையாய் எழுதிய உரையைப் பெரிய பரகாலஸ்வாமி ஸாதித்ததாகக் காட்டி உடனே கையும் களவுமாகப் பிடிபட்டது" என்றெழுதி உள்ளே விவரித்திருப்பதைப்பாரும்.

(மாதவாசார்) பார்த்தேனையா பார்த்தேன்; நன்ருகப்பார்த்தேன். ஏமாந்த சோணகிரியைப் பார்த்துச் சிரிக்கவேண்டியதன்ருே இங்கு முக்கியமான விஷயம். மடம் தன்பெருமைக்கு ஆசைப்பட்டு பதினுயிரக்கணக்கான பணத்தைச் செலவு செய்து பெரியாழ்வார் திருமொழி வியாசுகியானமும் பெருமாள் திருமொழி வியாக்கியானமும் மற்றும் பலவியாக்கியானங்களும் அச்சுப்போட்டு வைத்துக் கொண்டு நாளைக்கும் பாரிதோஷிகப்ரதானம் பண்ணிக்கொண்டிருக்கிறது. உன் வயிற்றெரிச்சல் தீர நீயெழுதுகிருய் 'கையுங் களவுமாகப் பிடிபட்டு, என்று. சரி; என்னகளவு? என்னபிடி? கொஞ்சம் விளங்கச்சொல்லு பார்ப்போம்.

(அஸமஞ்ஜஸம்) அந்தமடஸ்வாமி நடந்த கதையொன்றைச் சொல்லியிருக்கிருர். (அதாவது) நாமோதராசார் தன்னிடத்தில் ஆஸ்தானபண்டிதராயிருந்தாராம். அவர்க்கு ஸந்தானம் ஏற்படவில்லையாம். ஷஷ்டிபூர்த்தியான

பிறகு ஒரு விவாஹம் செய்து கொண்டாராம். இருவருஷம் வெளிநாடு செல்ல நேர்ந்ததாமவர்க்கு. அப்போது நாராயணனென்கிற ப்ரம்மசாரியை க்ருஹத்திற்கும் க்ருஹிணிக்கும் காவலாக வைத்துவிட்டுப் போய்விட்டாராம். ஸீமந்த கல்யாணம் ப்ராப்தமாகியிருக்கிறதென்று அடுத்த ஆண்டில் கடிதம்போச்சுதாம். புறப்பட்டு வந்து ஸீமந்தகல்யாணம் நடத்திவிட்டார் மூக்கில் பிழிந்துவிட்டார் பிறகு புருஷப்ரஜை பிறந்து வளர்கின்றது. அப்தபூர்த்தியன்று குழந்தையையெடுத்துக் கொண்டு ஸ்வாமியை ஸேவிக்க வந்தார். ஸ்வாமி குழந்தையின் முகத்தை நாலு நாழிகை பார்த்து "என்னஜே! குழந்தை நம்ம நாராயணன் சாயலாயிருக்கிறதே" என்ருர் அதற்கு தாமோதராசார்—"ஸ்வாமீ! நான் இரண்டொருவருஷம் வெளிஸஞ்சாரம்போக நேர்ந்தது; அப்போது நாராயணனைத்தான் காவல்வைத்துப் போனேன். இவன் என்னபண்ணிவிட்டானே தெரியவில்லை. நான் இரண்டு ஸம்வத்ஸரம் வெளியூர்களில் இருந்துவிட்டபடியால் ஒன்றும் கவனிக்க முடியவில்லை, ஸீமந்த மணையில் நான்தான் உட்கார்ந்தேன். அப்போது அவன் ஊரிலேயேயில்லை; ஸ்வாமிக்கு ஸந்தேஹமாயிருந்தால் அவனைக் கேட்டுப் பார்க்க— என்ருர் தாமோதராசார். ஸரி, போய்வாரும் என்று சொல்லி குழந்தைக்கு ஒரு மகரகண்டியும் நாராயணனுக்கு ஒரு தகடியும் அளித்து அனுப்பிவிட்டார் ஸ்வாமி.

(மாதவாசா) ஸ்ரீஸ்வாமி அதை என்னிடத்திலும் ஸாதிச்சாச்சுது. அங்கு கையுங்களவுமாகப் பிடிபட்டதுபோல் இங்கும் பிடிபட்டதாகச் சொல்லுகிருய் போலும். விஷயம் புரிந்துகொண்டேன். ஸரி. அடுத்தவிஷயம் ஏதாவது சொல்லவிருக்கிருயோ? ஏதேனும் சொல்லவேண்டியதுண்டோ?

(அஸமஞ்ஜஸம்) இல்லாமலென்ன? எந்தவிஷயம் சொன்னாலும் பங்கமாகவே முடிகிறது. உத்தரராமசரிதத்தில் "துக்கஸம்வேதநாயைவ ராமே சைதந்யமாஹிதம்" என்று இராமன் சொல்லுவதாக பவபூதி வைத்துப் பேசியுள்ளார்; என்விஷயத்தில்தான் அது ஸத்யமாயிருக்கிறது. ஆனாலும் சொல்லவேண்டியதையெல்லாம் சொல்லித் தொலைக்கிறேன். என்னுடைய துர்க்கந்த குஸுமத்தின் முடிவில் ராமாநுஜாபாத்ரத்தின் பங்கத்தைப் புதுப்பித்துக்கொள்ள "காலஅட்டவணை" என்று ஒன்று போட்டிருக்கிறேன் அதில் என்ன எழுதியிருக்கிறேனென்ருல் 'கண்டீரவ நரஸிம்ஹராஜ ஒடையார் என்ற அரசன் ஆண்ட காலம் கி. பி. 1704—1714. இவ்வரசனிடம் திருநாராயணபுரத்தில் ஸன்னிதியில் ராமாநுஜாபாத்ரம் அநுஸந்திக்கக்கூடாதென்ற வியவஹாரம் விசாரணைக்கு வந்தது; இவன், ராஜ ஒடயார் காலம்முதல் என் தகப்பனார் காலம் வரையில் அநுஸந்திக்கப்பட்டுவந்த அந்த சுலோகத்தின் அநுஸந்தானத்தை இப்போது நிறுத்தக்கூடாதென்று தீர்ப்புக் கூறினன்" என்றெழுதியிருக்கிறேன். இதனல் ராமாநுஜாபாத்ரத்திற்கு எங்கும் பங்கமேயென்கிற வாதம் தலைமடிந்துவிட்டதல்லவா? ஆலோசித்துச் சொல்லும்.

(மாதவாசார்) பரஞர் பராங்குசாசார் சொல்லிக்கொண்டிருந்தார்— "என் தாயாரை ஸர்வத்ர ஸர்வதா ஸ்வைரிணியென்று பல பேர்கள் பறைசாற்றிக் கொண்டிருந்தார்கள்; அவள் அறுபதாவது வயதிலிருந்து பரமபதிவ்ரதையென்பதை ராஜஸ்தானத்தில் ருஜுப்படுத்திவிட்டேன்; அதனல் (ஸர்வதா

ஸ்வைரிணி) என்று சொல்லிக் கொண்டிருந்தவர்கள் பங்கமடைந்து போய் விட்டார்கள்" என்று. அடாமூதேவீ! நீயெழுதியிருப்பதனுல் என்ன சிலாசாஸனம் ஏற்படுகிறது தெரியுமா? இந்த நூதனபாத்திரத்தனியனைப் புதிதாகச் சொல்ல ஆரம்பித்தார்களென்பதும், அதன் மேல் விவாதமும் விவகாரமும் ஏற்பட்டதென் பதுமே சிலாசாசனமாகிறது. மரத்தின் நுனியிலிருந்துகொண்டு அடிமரத்தை வெட்டிக்கொண்டிருந்த மேதாவியின் கதையையேயன்ரே நினைவூட்டுகிருய்.

(அஸமஞ்ஜஸம்) அந்த கதை வாஸ்தவந்தான். இங்கு அப்படியென்ன? அதை நானே மிகமிக விளக்கமாகச் சொல்லுகிறேன். திரு நாராயணபுரத்தில் ஸ்ரீசைலேசத்தனியனைச் சொல்லிக்கொண்டிருந்த தென்கலையார்கள் வடகலையார் மேல் கம்ப்ளேண்டு கொடுத்தார்கள். என்னவென்று கம்ப்ளேண்டு? இந்த வடகலை யார் எங்களுடைய புராதனமிராசுக்கு விரோதமாக ஒரு வடகலை மந்திரத்தைச் சொல்ல ஆரம்பித்திருக்கிருர்கள். இதை நீங்கள் தடுக்கவேண்டும் என்று பிராது. மேல் சங்கதியிருக்கட்டும் இந்த பிராதினுல் என்ன ஏற்பட்டது? ஸ்ரீசைலேசத் தனியனநுஸந்தானம் நடந்து கொண்டிருந்ததென்றும். ந்யூபாத்ரம் சொல்ல நூதனமாக ஆரம்பித்து கலஹத்தையுண்டு பண்ணுகிருர்கள் என்று முறை யிட்டுக் கொண்டதாகவும் ஏற்பட்டது. மூளையுள்ளவர்கள் இங்கு எப்படியெழுதி யிருக்கவேண்டுமென்ருல் வடகலையார்களை வாதியாக வைத்தும் தென்கலையார்களை ப்ரதிவாதியாக வைத்தும் "நாங்கள் ஆயிரம்வருஷகாலமாகச் சொல்லிவருகிற ராமாநுஜாபாத்திரத்திற்குப்போட்டியாகத் தென்கலையார்கள் புதிசாக ஸ்ரீசைலேச பாத்திரம் சொல்ல ஆரம்பித்திருக்கிருர்கள். ப்ரபு இதைத் தடுக்கவேணும்" என்று வடகலையார்கள் கேட்டுக்கொண்டதாகவும். அதற்குமேல் ஒடயார் தென்கலை யார்களைத் தடுத்தும் தண்டித்தும் அவர்களைவிலக்கிவிட்டதாகவும் எழுதியிருக்க வேண்டும். அப்படியில்லை. இந்த ராமாபாத்ரத் தொல்லை தென்னுடுகளில் ஆரம்பமாவதற்கு முன்னே முதன்முதலாகத் திருநாராயணபுரத்தில் ஆரம்ப மாயிற்றென்கிற உண்மை வெளிவந்தது.

(மாதவாசார்) அந்த ஒடயார் என்ன உத்தரவு போட்டிருக்கிருன்? தன் மதிப்புக்கு உரிய பரகாலஜீயர் சொல்லிக்கொடுத்தபடி "யார்சொல்லுவது புதிசோ, யார் சொல்லுவது பழசோ அது எனக்குத் தெரியாது; கோவிலில் யார் எது வேணுமானுலும் சொல்லிக்கொள்ளலாம். எதையும் நான் தடுக்கமுடியாது கோவிலில் சண்டைபோடுகிறவர்களைச் சுட்டுவிடும்படி நான் கட்டளையிடுவேன்" என்று சொல்லி முடித்தார் ஒடையார்.

(அஸமஞ்ஜஸம்) விஷயம் இப்படித்தான். எப்படியானுலும் "ராமா பாத்ரத்திற்கு எங்கும் பாதுகாஸஹஸ்ரபஹுமானந்தான்" என்ற வார்த்தை திருநாராயணபுரம் வரையில் பொய்யாகத்தானே ஆய்விட்டது. இதனுல் என்னுடையவாதம் வெற்றிபெற்றுவிட்டதல்லவா? இங்கு முக்கியமான விஷயம் இரண்டு; (1) ஒடையாருக்கு உபாயம் சொல்லிக்கொடுத்த பரகாலஸ்வாமி "ராமாபாத்ரம் தவிர வேறுபாத்ரம் சொல்லக்கூடாதென்று கடுமையாகக் கட்டளை யிட்டுவிடு" என்று சொல்லிக் கொடாமற்போனது ஒரு அசட்டுத்தனம். (2) திருநாராயணபுரத்து வடகலையார்கள் "எங்களுக்கு இடைஞ்சலாகத் தென்கலை யார் வேறுபாத்திரம் சொல்லுவதைத் தடைசெய்யவேணும்" என்று கோரவில்லை.

ஸ்வாமிக்கு ஒடயாரிடம் உபாயம் சொல்லிக்கொடுக்கத் தெரியாமல் போயிற்று, வடகலையாருக்கும் அர்ஜிகொடுக்கத் தோன்ருமல் போயிற்று.

(மாதவாசார்) என்னைவிட நீ விஷயத்தை நன்கு தெரிந்துகொண்டிருக்கிருயே. நல்ல மேதாவிதான் நீ. (அஸமஞ்ஜஸம்) அதிலென்ன ஸந்தேஹம்? அநாதிகாலமாக ராமாபாத்ரந்தான் நடந்து வருகிறதென்று கண்டீரவ ஒடையார் தெரிந்து கொண்டிருந்ததும் சொன்னதும் உண்மையாயிருந்தால் திருநாராயணன் ஸன்னிதியில் வேறு தனியன் சொல்லக்கூடாதென்கிற கட்டளையன்ருே பிறந்திருக்கவேணும். அக்கட்டளை ஏன்பிறந்திருக்கவில்லை? என்று கேட்டால் இந்த அஜாமோளங்கள் விழிக்கவேண்டியதுதானே. மேலும் கோவில்களில் யார் என்ன சொல்லுகிருர்களென்று ஒடயார் தெரிந்து கொள்ள ப்ரஸக்தி லேசமும் கிடையாது ஒடயார்கள் கோவிலுக்கு வருவதும் கதாசித்; வந்தாலும், யார் என்ன சொல்லுகிருர் என்று கவனிக்க ப்ரஸக்தியே கிடையாது. கவனித்தாலும் அவர்களுக்கு ஒரிழவும் தெரியாது. பாஷையோ வேறு.

(மாதவாசார் தென்னுடுகளில் பாத்ரவ்யவஹாரங்கள் நியாயஸ்தானங்களிற் சென்று பரிஷ்காரம் பெற்றிருக்கிறதல்லவா? அது எப்படி? வெள்ளைக்காரன், கிறிஸ்துவன், யவனன், ஸ்மார்த்தமாத்வர்கள், நாயுடு முதலியார்கள்... இப்படி பல ஜாதிக்காரர்கள் பாத்திரத் தீர்ப்புகள் சொல்லியிருக்கிருர்களே, அவர்கள் எப்படி கவனிக்க முடிந்தது? (அஸமஞ்ஜஸம்.) நியாயாதிகாரிகள் ஸாக்ஷிவிசாரணைகள் செய்தன்ருே உண்மையையறிந்து தீர்ப்புகள் சொல்லுகிருர்கள்; ஒடையார் ஸாக்ஷிவிசாரணை செய்தானுஎன்ன? 'வாத்யார் சொன்னபடி தர்ப்பயாமி' என்கிருப் போலே ராமாபாத்ரஸ்ருஷ்டிபண்ணின யதி தான் சொல்லிக் கொடுத்தபடியே யன்ருே சொல்லியிருக்கிருன். அவன் எந்தபாத்திரத்தைக் கண்டான்? இது பரிசுத்தபாத்திரம், இது பொணைக்கலப்பாத்திரம் என்று நம்வீடுகளில் நடையாடுகிறவர்களுக்கே தெரியாத போது கன்னடியனுக்கு எப்படியையா தெரியும்?

(மாதவாசார்) அப்பா அஸமஞ்ஜஸம்! நீ என்ன, பித்தனு பேயனு? இரண்டு பக்கமும் பேசுகிறதே உன்வாய்? ஸப்தபங்கீகாரனைக் கேள்விப்பட்டிருக்கிறேன்; நீ அவன்தானுஎன்ன?

(அஸமஞ்ஜஸம்) இல்லை மாமா! அத்வைதிகள் பாரிபாஷிகதசை வ்யாவஹாரிக தசை என்று இரண்டு சொல்லுகிருர்களே, அவர்களும் ஸப்தபங்கீகாரர்களா என்ன? வீம்புக்கு வேட்டையாடுவதுமுண்டு, உண்மையை வெளியிடுவதுமுண்டு. ஒன்றே ஒன்று சொல்லுகிறேன். இதை ஆராய்ந்து பாரும். தேவாஸுரஸ்டர்த்தை உலகமறிந்தது; எந்த புராணத்தையெடுத்தாலும் பகவானிடம் சென்று முறையிட்டுக் கொள்பவர்கள் தேவர்களே யொழிய, அரக்கரோ அசுரரோ சென்று முறையிட்டுக்கொண்டதாக ஒரு புராணங்கண்டதுண்டோ?

(மாதவாசார்) இது நீ கண்டுபிடித்த அபூர்வவிஷயமா என்ன? தேள் கொட்டிற்று, பாம்புகடித்தது என்று சொல்லிக்கொண்டு மனிதர்கள் மருத்துவரிடம் ஓடுகிருர்களேயொழிய கடிக்கிற தேளும் பாம்புமா ஓடுகிறது? இது கிடக்கட்டும். நீ தானுன தன்மையை விட்டுவிட்டுப் பேசுவதில் சுவையில்லை. நம்மாழ்

வார் "நீயாய் நீ நின்றவாறு" என்கிருரே; அப்படி நீ நீயாகவே யிருந்து பேசுவதில்தான் ரஸமுள்ளது. ஆனபடியால் அப்படி பேசு.

(அஸமஞ்ஜஸம்) இப்போது நீர் பேசினதில் தேள் பாம்புகளின் ப்ரஸ்தாவம் வந்தபடியால் அதிலிருந்து நினைவுக்கு வந்ததைச் சொல்லுகிறேன். இதை ஊக்கமாகக் கேளும். நம்முடைய வீடுகளில் பல்லி யெனகிற பிராணியும் உண்டாகிறது, தேள் என்கிற பிராணியும் உண்டாகிறது. பல்லியானது எங்கும் தாராளமாகத் திரிந்துகொண்டிருக்கிறது; தேள், பாம்பு, நண்டுதடுக்கா முதலான ஜந்துக்கள் அதிகமாகத் தலைகாட்டாமல் மறைந்துகொண்டும் ஒளிந்துகொண்டுமே காலங் கழிக்கிறபடியைக் காண்கிருேம். இதற்கு என்ன காரணம்? உமக்குத் தெரிந்திருக்கிறதா? எனக்குச் சொல்லுவீரா? *நஞ்சுடைமை தானறிந்து நாகங்கரந்து உறையும்* என்று கேட்டிருக்கிறேன். நாகமென்பது பாம்பு; அதனால் விஷப்பூச்சிகளெல்லாம் உபலக்ஷணவிதயா க்ரஹிக்கப்படும்போலும்; தேள் பாம்புகள்தம்மிடத்தில் விஷமிருப்பது தெரிந்துகொண்டிருப்பதனால் மறைந்தே காலங் கழிப்பதாகத் தெரிகிறது. இதை நீர் சொல்லாமலே தெரிந்து கொண்டுதானிருக்கிறேன். அப்படி யிருக்க, மறைந்தே காலங்கழிக்கிற அந்த ஜந்துக்களும் மாண்டொழிந்து போகின்றனவே. அதற்கு என்ன காரணம்? என்பதுதான் ஜிஜ்ஞாஸை.

(மாதவாசார்) நீ பதில் தெரிந்துகொள்ளாமல் கேட்கிற கேள்வியோ இது? உண்மையில் உனக்குக் காரணம் தெரியாதா? தெரிந்தே கேட்டாலும் நான் விடை கூறித்தானே யாகவேண்டும். விதி யென்பது தனிப்பட்டது. "நான் கதவையெல்லாம் பூட்டிக்கொண்டு ஒரு சிறிய ரூமில் முட்டாக்கு போட்டுக்கொண்டு கிடந்துவிட்டால் என்னை யமன் எப்படி பிடிக்கிருன் பார்ப்போம்" என்ருனும் ஒரு முட்டாள் பயல். 'விதி மாண்டால் விரியங்கத்திரி" என்று கேள்விப்பட்டிருப்பாயே நீ. விதி மாளுங்காலமென்று ஒன்றுண்டப்பா! அந்த காலம் வந்தால் உள்ளே ஒளிந்துகிடக்கிற ஜந்து தானகவே வெளியில் ஓடிவந்து தலைகாட்டித் தடியடிபட்டுத் தொலைந்துபோகிறது, இது ஒரு அபூர்வமான விஷயமா? இப்போது நடக்கிற பேச்சுக்களில் இதை எதற்காக எடுத்துக்கொண்டாயப்பா!

(அஸமஞ்ஜஸம்) வீண்பேச்சா இது? அதோபாரும்; அந்த கம்பத்தில் சாய்ந்துகொண்டு தலையைத் தொங்கவிட்டு அழுகிற தாதாவைப் பாரும். அது என்றைக்கோ எதையோ எழுதி மறைத்து மறைத்து மூடிமூடி வைத்துக்கொண்டிருத்ததாம். தன்னருகே வருகிறவர்களுக்குமட்டும் ஏகாந்தமாக வாசித்துக் காட்டிக்கொண்டு டக்கு டமாரத்தில் காலங்கழித்துவந்ததாம். விதி மாண்டால் விரியங்கத்திரி யென்று சொன்னீரே, அப்படி விதி மாளுங்காலம் குறுகிவிடவே அது வெளிப்பட்டுவிட்டதாம். நகுலத்தின் வாய்ப்பட்ட நாகம் படுகிறபாடும், நாகத்தின் வாய்ப்பட்ட தவளைபடுகிறபாடும் படுகிறதாம். ஏடுகளைத் திருப்பித் திருப்பிப் பார்க்கிறதாம். சிரிப்பும் அழுகையும் சேர்ந்து வருகிறதாம். ஸந்தியா காலமாய்விட்டது; இன்று சென்று நாளைக்கு மறுபடியும் சேருவோம் பேசுவோம்.

(தொடரும்.)

மூன்ருவது ஆன்னிகம் முற்றிற்று